உ

கடவுள் துணை.

பதினெண்சித்தர்களில் ஒருவராகிய

# திருமூலநாயனார்

# வைத்திய காவியம்

# 1000 - பாடல்



ஆயுள்வேத பாஸ்கரன்

கந்தசாமி முதலியாரால்

பற்பல ஏட்டுப்பிரதிகளைக் கொண்டாராய்ந்து

பிழையறப் பரிசோதித்து



சென்னை - இட்டா,

பார்த்தசாரதி நாயுடு சன்ஸ்

சக்கரவர்த்தி பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.



இதன் விலை] 1936. [ரூபா 1.





உ

சிவமயம்

# திருமூல நாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# வயித்தியகாவியம்-1000



காப்பு

ஆனந்தமாகி நின்ற வுமையாள்பாதம்
அகண்டபரிபூரண மானமயர்பாதம்
வானந்தமாகி நின்ற கணேசர்பாதம்
மருவியதோர் அகத்திநந்திபாதம்
தானந்தமாகி நின்ற குருவின்பாதம்
சனகருடன் வியாசமகா முனியின்பாதம்
போனந்தமாகியதோர் சித்தர்பாதம்
போற்றியாயிரத்திரட்டு புகலுவேனே
புகலுவேன் சவர்க்காரத் தொடர்புதன்னைப்
பூட்டிவைத்தசரக்குகளைப் புக்களங்குயாவும்
நிகலுவேன் செந்தூரங் கற்கம்யாவும்
நேரானமெழுகோடு பதங்கச்சுண்ணம்
அகலுவேன் திராவகமுஞ் செயநீர்பற்பம்
அழகானசத்தரு மித்துருவுங்கூட
புகலுவேன் திருமூலர் நாயனூரும்
பாடிவைத்தேன் மானிடர்கள் பிழைக்கத்தானே.

நூல்

## (அப்பிரேகப்பற்பசத்து)

கலிவிருத்தம்.

மாய்கையருக்கு மறைந்தைக்கழித்திடும்
வேகமாய்ஞானம் வீடிதெனக்காட்டிடும்
யோகப்பலிக்குமுறை தியானக்காயத்தான்
போகப்பலிக்கும் புகழ்ச்சியிதமாமே.

பாரே நல்லப்பிரேகம் பாங்கானகொள்ளாடே
நேரேசலம்விட்டு நிமிரவெரித்திடு
தாரேயிடித்துத் தனிநவநீதஞ்செய்
சீரேசிலையிட்டுச் சேர்த்தங்குலூதிடே. 2

ஊதிடப்பற்பமா மூறவாமிதுக்கிடை
மாதிடுசுத்தித்த கந்தியைமாட்டிடு
ஓதியகுன்றியுரவான வெண்ணெயு
மாதிமெழுகுமண்ட நீர்வார்த்திடே. 3

வார்த்திதனோடு வனமாய்ப்படிகஞ்சே
ரேத்தியரைக்கிலி[illegible] வைந்துமித்திரங்
கோர்த்திடுமேனி சமூலத்திலேயரை
சேர்த்தேயுறும்படி செலுத்திடுஞாலமே. 4

ஞாலத்திலூதநலம் பெறச்சத்தாகும்
வாலுற்றகிட்டத்தை வாங்கிப்பின்னூதிடு
கோலுற்றதெல்லாங் குளவியசத்தாகுஞ்
சூலுற்றுசத்துக்குச் சுருக்கிட்டுசோதியே. 5

(அப்பிரேபற்பசத்து செந்தூரம்)

சோதிக்கமித்திரஞ் சூட்டிடுறென்னந்தி
ஆதிப்படிக்கு அதனோடுவெண்கார
மாசற்றசாரம் வழங்கியரண்டுப்பு
பேதித்தவீரம் பிலத்தவளிகிலே. 6

வளிகிலிடைக்கொக்க வாகாய்சரக்கைந்தும்
அழகியதேனிலரைத்தே பதம்பண்ணி
யிலகியவப்தரோகச் சத்தாங்குகையினி
லளகியச்சிலையிட்டுத் தூக்கியுருக்கிடே. 7

உருக்கிட்டயந்திர முருக்குமிலுப்பைப்பூ
வர்க்கமாம்நொச்சியில் வாழைக்கிழங்கிலே
நெருக்கினவெண்ணைநெய் நேராட்டுப்பால்வெல்லந்
தெருக்குஞ்சதுரக்கள்ளி தேங்காய்ப்பால்வார்த்திடே. 8

வார்த்திதுவெல்லாம் வாகாய்ச்சமன்கூட்டி
யார்த்தியவம்பிரே கச்சயத்தையதில்வாரு

ஏத்தியுருக்கியிதில் வார்பதினொன்று
நாத்தியைமெய்க்க நட்சேத்திரமாகுமே. 9

ஆமேயிச்சத்துதா னெல்லாதுரைக்காகும்
போமேவெகுதூரம் போட்டதெல்லாங்கொல்லுந்
தாமேவுபாத்திரந்தனிற் கருஞ்சேந்தூரம்
ஆமென்றேயீசனம் மைக்குரைத்ததே. 10

உரைத்தமுறையெல்லா மூறுதியாயென்னந்தி
தாத்தநற்பாத்திரஞ் சமைக்கவழிசொன்னு
ரிரத்தியவப்பிரேகச் சத்துக்குநேர்பாதி
துரத்தியபொன்னியைச் சுட்டியுருக்கிடே. 11

(அப்பிரேக்குகையில் சூதம்)

உருக்கிக்குகைபோலொரு நளமாய்வார்த்து
பெருக்கியசூதரைப் பேய்ச்சாற்றினிலிட்டு
சுருக்கிடிற்றூரிலே சூதமயினமாம்
அருக்கியசூதரை யரைப்புண்செய்திடே. 12

செய்திடச்சூதந்திரண் டேயிறுகிடுங்
கொய்திடுங்கஞ்சாவிற் குமட்டிப்பொதிந்திகை
பையபதினொன்றுபாங்காய்ப்புடமிட
உய்யகனகப்புடமிட மடித்திடே. 13

அடித்திட்டசூத மமளியாக்கண்விழுங்
கொடுத்திடுங்காமியங் கோடானகோடிதான்
விடுத்திடும்யோகி விண்ணில்விலாசமாய்க்
கடுத்திடுமாருதம் போலேகவனமே. 14

கவனமொன்றல்ல கன்னிக்குத்தம்பனங்
கவனமொன்றல்ல காணவச்சியமாங்
கவனமொன்றல்ல களியாதுகாயங்கேள்
கவனமொன்றல்ல கல்லும்பொன்னுகுமே. 15

(அப்பிரேக்குகையில் வேதை)

ஆகுந்துறைவிட்டு அப்பால்துறைகேளு
டாகியஅப்ரேகமூசை பலமொன்று
வேகிநிமிளைவிளங்கிய பூநாகத்
தாகியகாந்தந்தனி மூண்பலமொன்றே. 16

(செந்தூரம்)

பலமாயிரண்டும் பாங்காயுருக்கிட்டு
பலமாய்க்குகைவார் பொரணசெந்தூரங்
குலமாஞ்சரக்கினைக் கூட்டிற்குநந்தாய்
நலமாகச்சூதத்திற் சமைக்கச்செந்தூரமே. 17

செந்தூரம்வைக்கச் சேர்ந்தவினைங்கேளு
சந்தியநாதங் கலங்காதவீரனும்
பந்தியமால்தேவி பகிர்ந்தமனோசிலை
முந்தியதாயிட்டு மூட்டிச்சமைத்திடே. 18

சமைக்கவேயிப்படி சகலசரக்கெல்லாம்
ஆமைக்கவுங்கூடாது மனவில்லைவேதைதா
னிமைக்குவிளிக்கோரிறவா ரொருநாளுஞ்
சிமைக்கும்பயந்திருஞ் சேருவார்ஞானமே. 19

சோதிக்குமித்திரஞ் சூட்டுந்துரைகேளு
மாதித்தவப்பிரேக மாதியபங்காந்தஞ்
சாதித்தசூதஞ் சகலவகைசத்தும்
போதித்துவேதையாம் பெலப்படுமுப்புக்கே 20

(நிமிளைக்கட்டு உருக்கினம்)

ஏமநிமிளையெடுத்தால் மூதற்றறும்
வாமயகஞ்சநிமிளை ரண்டாநாசம்
வேமயக்காச்சு வேகுநிமிளையு
மாமயலோகநிமிளை யோடுஞ்சென்னே. 21

அஞ்சுநிமிளை யடைகொப்பமலசல
மிஞ்சவேவார்த்து வெளியிர்புகைத்திடு
வஞ்சனைதிருமரு வியலூரக்கோபம
நஞ்சறப்போகும் நானோர்பதினைஞ்சே. 22

பதினைஞ்சுத்தீர்ந்தபின் பாங்காய்நிமிளைக்கு
மதிமிஞ்சுபாஷாணம் வழங்குமொழுக்கவ்வபா
லிதிலைஞ்சுதரமூலம் லெங்காயமத்துஞ்சாற்
றதிமிஞ்சுபுங்கம்பால் சுருக்கிடுசாரியே 23

சாரியிற்காரிசார்ந்திடும் ரண்டிப்பு
பாரியிற்கூடன்பகிர்ந்த அரிசியுப்பு

(இரும்பு உருக்கு)

உருக்குமிரும்புக்கு ளுத்தமமானது
மருக்குமெருக்குவளமா யழிஞ்சியுஞ்
செருக்கும்புரசு சிறந்தநல்முள்ளியுங்
கருக்கண்டக்கத்திரி காட்டினிற்குன்றியே. 32

குன்றியுடனேகூட்டாய் திருகள்ளி
பன்றிபாமாரகம்பார் தேவதாளியும்
பொன்றியசாரணை புகழாங்கருமத்து
தூன்றியகஞ்சாவுமாக வெண்பூவித்தே. 33

வித்துவகைதான்விளங்கப் பதினொன்று
இத்தையிடைகூட்டி யிசைவாயிடித்ததை
அத்திவிரைவேரின் சாற்றிலரைத்ததை
பொத்திப்புடமுந் தயிலமும்வாங்கிடே. 34

வாங்கித்தயிலத்தைவார்த்தே யயத்தின்மேல்
தேங்கச்சிவனார் தயிலமதைவிட்டுப்
போங்குமொருசாரி போட்டதில்நாக்காரி
வாங்கியவீரமும் லிங்கமுங்கூட்டிடே. 35

கூட்டுமிதனிற்குலாவிய வாளஞ்சேர்
நீட்டுமயந்தானிறுத்தனுக் கெட்டொன்று
ஊட்டிடுஞ்சரக்கையுற வாய்த்தயிலத்தில்
நாட்டியுருக்கத் தங்கம்போலாடுமே. 36

ஆடி யுருக்கிட வாகவெள்தீரும்
வாடியிளைத்துமயங்காதே மாண்பரே
தேடியசோதனை செலுத்திபேசோதிக்க
கோடிதுறைவேதை குலாவுமயந்தானே. 37

அயம்விட்டால்வேதை யாகாதுவென்னந்தான்
அயம்விட்டாலுப்புக்கு அஞ்சிவெகுண்டோடும்
அயம்விட்டாற்காய மழிவுக்குமேதுவாம்
அயம்விட்டாற்கெட்டாரென் றறைந்தனனந்தியே. 38

நந்தியுரைத்தார்நலமாம் பெரியோர்க்கு
பந்தித்தயேம நிமிளையுந்தங்கமுந்
தொந்தித்துருகையில் சூட்டுமனை சூதம்
விந்தித்தேதாதிவிந்து விற்போட்டிடே. 39

போட்டபெடைக்கொக்கப் புகட்டிவீரரை
நீட்டுதுருவண்டு நிலையானபூரமுந்
தாட்டறயாமுந்தனி வெள்ளைகண்டரும்
ஆட்டியவிந்து வாலரத்துமேல்பூசிடே. 40

பூசிமணிமேல் புலரவுலர்த்திடு
ஆசைமணல்மேலடைவாய்ப் புடம்பத்து
மாசையறவேவழங்கப் புடமொன்றி
லோசைக்குருவாகுமென்று மொழிப்பல்லவே. 41

ஒப்பல்லவென்றுவுரைத்த முறைகேட்கில்
செப்பியசூதத்திற் சேரொன்றதின்மே
லப்பியரைக்கவமளியாக் கட்டுண்ணுந்
தப்பியசூதங்கேள் தானை கொல்லும் நூற்றையே. 42

நூற்றுக்குவொன்று நூறேடுந்தேர்ந்தனை
மாற்றுவதென்னில்வளமாக நூற்றெட்டா
மூற்றுக்கண்போலே யொருகோடிவேதையாங்
காற்றுற்றதொந்தனைக் கண்டோடும்வேதையே. 43

(நிமிளைகுரு)

வேதைநிமிளைபோல் வேறொன்றுமேவ்வாது
ஆதிபராசத்தியம் மனுடநாதந்
சாதிவகையைந்துந் தனித்தனியேதுரை
சோதிகுருபோலே சூட்டிடுகஞ்சமே. 44

கஞ்சநிமிளையுங் கட்டிடுதங்கமு
மிஞ்சுருசூதமும் விளங்கவுருக்கிடு
முனைசெய்தவாறுபோல் மூடக்குருவாகு
மஞ்சாமல்செய்யவனித் தன்னசத்தியே. 45

சத்திக்குருவாற் சரக்கைத்தொடுமுனே
வித்தையிலெட்டெட்டும் விளங்குங்கவனமும்
புத்தியுமுத்தியும் பொலிவுற்றஞானமுஞ்
சித்தியுமாகுஞ் சிவனந்திபாதமே. 46

பாதப்பரிசனம் பகர்ந்திடுந்தாமமாம்
நீதமாநாதம் நிகர்ந்திடுவாசனை
வேதையிலெட்டெட்டும் விளையானவன்குரு
ஓதவதின்மேற்பின் றைப்பில்லைநந்தியே. 47

நந்தியருளால் நலங்கும்பராசத்தி
உந்தியின்கீழே யுணர்வாருமீசனை
தந்தையுந்தாயுஞ் சமனாகநோக்கிடில்
வந்தூமன்வாதம்வாய் பொத்திநிற்குமே. 48

நிற்குமொன்றல்ல நிலையாய்வயத்தம்ப
மிக்கியபேதனம் விரந்தவசியம்வா
மூக்கியமூன்றிலொரு கோடிசித்தியாஞ்
சிக்குவானீசனுட் சிவனாகுமே. 49

(பரிசுன்னம்)

ஆகுமேகஞ்சநிமிளை குருவொன்று
பாகுப்பரிதான் பத்ததின்மேற்பூசி
வேகப்புடத்தில்விளங்கும் பரிச்சுன்னம்
தாக்கியசூதரில்தாக்குந் திசைக்கொன்றே. 50

(சூதக்குருத்தோந்தம்)

திசைப்பட்ட சூதந்திரண்டு குருவாகும்
கசைப்பட்ட நீற்றில் காட்டக்குருவொன்று
அசைப்பட்டசைக்க வசையாமற்கட்டுண்ணு
மிசைப்பட்ட திப்படி யெடுத்திடுந்தொந்தமே. 51

தொந்தமோரொன்பது சூதங்கள்கட்டுண்ணுஞ்
சந்தேகமில்லை சதகோடிவேதையாம்
பந்தித்துப்பார்க்கப் பார்க்கவெகுதொழி
லந்தித்தசங்கிலி யமைந்திந்தயோகமே. 52

யோகத்தொழுலூறவான ஞானமும்
போகத்தொழிலும் புகழ்வசித்தியும்
வேகமிதுவிட்டால் வேறில்லையென்றேதான்
ஆகத்தில் நந்தியரைந்தான் புலிக்கேதான். 53

{ காந்தம்-நிமிளை-தங்கக்களங்கு மித்திராம் அப்பிரேகச்சத்து }

புலிக்குட்காந்தம்பொலி வாயுருக்கிட்டு
கலிமகடுவார்காக நிமிளைசமன்சேர்ந்து
இவிரண்டுருகிலிதிற் சேராஞ்சூதஞ்சோ
தலியமேதங்க மூந்தாக்கக்களங்கமே. 54

களங்கந்திசைக்கொன்று காட்டாயாவிமாலே
தளங்கியமாற்றுத் தட்பாறுயேழாகும்
உளங்கப்படாது உறுதியாமுப்புக்கு
மளங்கியசெம்பொன்னுமா மென்றுசாற்றிடே. 55

(வங்கதுரு)

சாற்றுஞ்சுவேத நிமிளையுதுய்யாறு
மேற்றியினிக்கூட்டி யிணையவுருக்கிட்டு
போற்றியேவங்கத்திற் பூட்டாய்குருவாகும்
தூற்றிடுவங்கத்திற் றுலையாரசிதமே. 56

ரசிதமுமேமமும் நாறுரெனநந்தி
ரசிதமுமேமமு நலமாமேநிமிளையில்
ரசிதமுமேமமும் நாட்டும்பெரியோர்க்கு
ரசிதமுமேமமும் நற்சிவலோகமே. 57

(வேதை)

லோகநிமிளை றுணுக்கற்றகாந்தமும்
வாகானதங்கமுமாட்டிடு சாரமும்
வேகமாய்ச்சென்று விரைந்துவுருகையில்
தாகமாய்வுண்மண் சாற்றிடுலிங்கமே. 58

லிங்கத்தையுண்டு நீலியன்கண்டமாஞ்
சங்கையாய்லோகத்திற் சாற்றும்திசைக்கொன்று
பங்கொத்தசெம்பொன் பரிந்தேழுமாற்றாகும்
பொங்குற்றவுப்புக்குப் போகாதுபாருமே. 59

பாருமிவைவைந்தும் பாங்காய்வரிசையாய்ச்
சேருமிளங்கண்டு சேர்ந்ததுரையெல்லாம்
போரும்பொருதுமே போகும்வெகுதார
மாருமறியாரறிந்த வர்சித்தரே. 60

(சத்துக்குமித்திரம்)

மித்திரங்கேள்வெண்ணெய் வெண்காரங்குன்றியும்
சித்திரயோரண்டந்தேன் பழஞ்சர்க்கரை
முத்தியகாடிமுது குளமோரெச்ச
மித்தவிதமெல்லா மெடுத்திடுஞ்சத்துக்கே. 61

சத்துக்குமாட்டவே தாக்குமயநாகஞ்
சத்துக்குச்சிறுமீன் தனிமேதிக்கொம்போடு

சத்தமுயற்செவிதந்த முழுந்தோடு
சத்துக்குழப்பாலுந் தாக்கியரைத்திடே. 62

அரைப்பாய்முயல்ரத்தம் மாடொடுபன்றிதான்
துரைப்பானகுக்குடஞ் சுந்தரிரத்தமும்
வரைப்பான்மிதிலமிஞ்சில் வாங்கியரத்தமும்
நிரைப்பாய்நல்லலப்பிரேக நீட்டியுருக்கிடே. 63

உருக்கியேவில்லையா யூதிடுஞாலத்தில்
கருட்டியகிட்டமாய்க் கரைந்துமொன்றாகவே
மருட்டியகளங்குமாக வுருக்கிடும்
மருட்டியவப்பிரேகம் பின்னூதச்செய்சத்தே. 64

(சத்துச்செந்தூரம்)

சத்துயிடைபொடி தங்கஞ்சமன் கூட்டி
பொத்தியுருக்கையிற்போடு சமன்சூதம்
பத்திபெடுத்தகிரிபாதி சேர்கெந்தி
சுத்தியாய்ப்பொற்றலைச் சாற்றிலரைத்திடே 65

அரைப்பீர்தினமூன்று அதிற்சத்துக்காரமும்
முரைத்தவயச்சிமிழ்க்கு வைய்த்துமண்செய்து
துரைத்தேபுடமூன்று சூட்டிப்பிரித்திடத்
தரைத்தேநிறமோடுந்தானுஞ் செந்தூரம் 66

செந்தூரமொன்றுதிகழ் வெள்ளிராகிமேல்
சந்தித்துருகச் சத்தத்திற்பசும்பொன்னும்
பந்தியாம்லோகம்பொற்பகம் பொன்னுங்காயங்கேள்
நந்திக்கவனமாமங் கோடிவாளரே. 67

கோடிதுரைக்கெல்லாங் கூட்டிடுவப்பிரேகம்
வாடியிலைக்காது வலுக்கானபுடச்செயம்
ஓடியிளைத்து வுருகின்றமாண்பரே
தேடியிதைப்பார்த்துத் தேளிந்துநீகூட்டிடே. 68

கூட்டியவப்பிரேகங் குலாவியசெந்தூரம்
நீட்டியகுங்குடம் நீள்பீசம்விட்டரை
நாட்டியகுன்றிபெடை தின்னமண்டலம்
ஆட்டிக்கிறிடிக்கிற்றழியாது காயமே. 69

காயம்வலியுங்கவனங் கொடுபோகு
மாயாமலமெல்லாம் வறையறத்தீர்ந்திடு

மாயசிவானந்தமதிக மெய்ஞ்ஞானமா
யோயத்துரியத் துள்ளாயிருப்பனே. 70

(அப்பிரேகக்கிண்ணியில் ரசவெண்ணெய்)

இருக்கவேயின்னமெடுத்த துறைகேளு
மருக்கப்பிரேகச்சத்தை வாகாகசோதித்து
சுருக்கமாய்க்கிண்ணிபோல் சூட்டியதைவார்த்துச்
செருக்கியசூதத்தைச் சிறக்கவதில்வாரே. 71

வார்த்திடுகிண்ணியில் வைத்திடுவாலுகை
கார்த்திடுமேலே கருமத்தன்சாற்விட்டு
ஏர்த்திடுதீமூட்டி யெரித்தேபிழிந்திட
நாற்றிசைமெய்க்க நவநீதமாகுமே. 72

(குளிகை)

ஆகுநவநீதமெல்லாந் திரண்டபின்
போகும்நல்லாரையிற் பொதிந்தேபுடமிட்டு
வேகுமிறுகிவிரைந்தே குளிகையாம்
பாகுநல்லாக்கிறிப் பாங்காகவேற்றிடே. 73

ஏற்றுங்குளிகையை யிட்டுவாய்த்தம்பனம்
மாற்றுமரணம் வசியங்கவனமாம்
தேற்றுஞ்சடலத்தைத் தீவினையோயாது
தோற்றந்துரைக்கெல்லாஞ் சுட்டபசும்பொன்னே. 74

(சத்துதங்கம்-நாகம்-சூதம்-வீரம்-லிங்கக்களங்கு)

சூட்டுமுறைப்பாடு சொன்னேரேயென்னந்தி
ஆட்டிதற்சத்து மதனிடைதங்கமு
மோட்டுநவலோகமுந் திடைநாகமுந்
தாட்டியசூதஞ் சமனுயுருக்கிடே. 75

உருக்குமூகத்திலுயர் நாலுக்கொள்வீரஞ்
கொருக்கிடர்பாதி சுத்தித்தலிங்கத்தைச்
செருக்கிக்களங்காகுஞ் சேர்ந்தநவலோக
மருக்கிட நாற்றென்று ஐரண்டுமாத்தாமே. 76

மாத்தாகவிப்படி வைத்தார்வெகுதுறை
ஆத்தாருடநாத மடங்காதுவண்டத்தி
லூத்தாயெழுந்து வொருகோடிசித்தியாம்
பார்த்தார்பெரியோர் பகிர்ந்தனர்நந்தியே. 77

(கேந்தகச்சத்து-வேறு)

மிளகுதக்காளி விளங்கியசாற்றிலே
யளவாககெந்தியதில் சேரநெய்குத்தி
தளவாயுருக்கிச்சா யைம்பதுதரம்வரை
வளமாய்ப்பின்சாறு வார்த்துக்கொதிப்பியே. 78

கொதிப்பிப்பாய்ச்சாற்றில் குலாவித்தினமூன்று
மதிப்பித்தேதக்கெந்தி வளமாகக்கட்டுண்ணும்
விதிப்பாகக்கல்வத்தில் விளங்குமேதாசன்பூ
நிதிப்பித்தசாறூட்டி நிமிளவரைத்திடே. 79

அரைப்பாயதின்மூன்று அப்பாலேமாந்தளிர்
விரைப்பானசாற்விட்டு விரைந்தரைமூன்றுநாள்
கரைப்பாங்களச்சிப்பருப்பு நெய்மூன்றுநாள்
உரைப்பானரோசநெய் யூறித்தினமஞ்சே. 80

அஞ்சுதினந்தா னடவாயரைத்தபின்
மிஞ்சியவாத சூடோரிதிசைக்கொன்று
பொஞ்சமைமித்திரம பூட்டியுருட்டியே
நஞ்சங்களற்றிடும் ஞானத்திலூதிடே. 81

ஊதிடச்சத்தா யுருயிறங்கிடும்
வாதிடுந்தங்கமும் வளமானநாகமும்
போதிடுஞ்சுதமும் புகட்டியுருக்கிடு
வோதிடும்லோகத்து வொருநூற்றுக்கொன்றிடே. 82

இட்டிடலோகமிசைந்து பசும்பொன்னும்
மட்டுடன்குன்றியெடை தின்னக்காயங்கேள்
கெட்டுடல்போகாது கெவனங்கொடுபோகும்
பட்டிடும்பாசம் பதியிலிருத்துமே. 83

(கேந்தகக்கட்டு)

என்றுநற்கெந்திக் கிதமானசுத்திதான்
தன்றுமெலிச்செவிச் சாறுடுவெண்ணைச்சி
பொன்றுமெழுத்தாணி பூண்கரிசாலே
மன்றுகுமரியும் வார்த்தேயரைப்பதே. 84

அரைத்தேயஞ்சாம மடவாகபாண்டத்தில்
விரைத்தேநற்பால்வார்த்து மேல்வண்டுகட்டியே
தரைத்தேபரிந்திட்டுச் சட்டிகொண்டேமூடி
கரைத்தேகனமேல் காட்டிடசுத்தியே. 85

சுத்திந்தகெந்தியைச் சூட்டுமயக்கண்ணி
மத்தைசிறுகீரைவன் கீழ்க்காதெல்லியும்
கத்திரதிகாகவர சிலைச்சகறுடன்
மூத்தித்தசாறு முருகச்சுறுக்கிடே. 86

இட்டேயெடுத்து இதமானகெந்தியை
அட்டான ஆமையோட தனிலதைவைத்து
ஒட்டேநல்லுப்பு மண்ணுறவாச்சீலைசெய்
மட்டேயிருசாமம் வாலுகைத்தீயிடே 87

தீயிட்டெரிக்கச் சிறுகவார்பன்றிநெய்
வாயிட்டகெந்திவளமாகக்கட்டுண்ணும்
மாயிட்டசெநதூரமாகுந் துரைக்கெல்லாந்
தாயிட்டுத்துவிட்டுத் தப்பாமற்பார்த்திடே. 88

பார்த்திடுங்கெந்திதான் பாங்காயளவுடன்
சேர்த்திடும்செம்பந்தம் பூச்சாறுவிட்டதில்
வார்த்திடுஞ்சூதம் வளமாகவெட்டொன்று
கோர்த்திட்டரைப்பாய்க் குலாவித்தினம்பத்தே. 89

பத்தாநாளானபின் பார்வைபாலுவைநெய்
சூத்தியரைப்பாய் குலாவித்தினமஞ்சு
மத்தியரோசநெய் வார்ந்தரையைநதுநாள்
உத்திடுங்குப்பியுற வாயடைத்திடே. 90

அடைத்தேநல்வாலுகை யடைவாகநாற்சாமம்
இடைத்தேகனல்மூட்டச் செயமாகிக்கீழ்நிற்கில்
மூடைத்தேமூன்மந்திர முறுமஞ்சுமித்திரந
துடைத்தேநற்சூதக் கனித்தோலும்வைத்திடே. 91

(கெந்திசெம்பு-வேதை)

வைத்தேயுலையில் வளமாகமேலூத
அத்தேயுருகியருண நிறமாகும்
பைத்தேவியாசப் பாங்காய்ப்பிறந்திடு
முத்தேநற்செம்புலொரு கோடிவைதையே. 92

வேதைக்கும்நல்லது மெய்க்கிது நல்லது
பாதைக்குநல்லது பரியெல்லாஞ்செம்பாகும்
போதித்தசாறணை போடவெகுநன்று
ஓதித்தசெம்பிபோலொப் பெங்குமில்லையே. 93

(வேறுகெந்தி)

குமரியின்சாற்றிற் குலாவியகெந்தியை
அமரியெரித்து ஆறுஅசாமந்தான்
கமரியசூதக்கனித்தோல் சிவந்தது
அமரியிற்சூரணமது நாலுக்கொன்றிடே. 94

இட்டதன்கண்டக்கனிச் சாற்றைவிட்டரை
மட்டேயூமத்தை மாதளம்பூச்சாறு
விட்டேநற்பஞ்சமு மிந்திரங்கூட்டியே
ஒட்டேத்துக்கொண்டு பழமிட்டுலரைத்திடே. 95

உலர்த்திடும்வில்லையை யொக்கவேகொட்டிடு
பிலத்திடுஞாழத்தில் பேசாமலூதிடு
மலத்தைக்கழித்து மணிமணியாவிழும்
பிலத்தரவியிது பின்னெதிரில்லையே. 96

எதிரில்லைசெம்பு மேலேத்தவகைசெப்பு
மதிரில்லைப்பொன் மேலேயையாறுகொன்றிடு
வெதிரித்தவாளேயை விரைந்துசரிகூட்டு
அதிரித்துதின்ன அழியாதுகாயமே. 97

அழியாமற்பொன்மேலே அஞ்சியுந்தொந்தனே
வழியானசூதத்தை வளமாய்ச்சரிகூட்டி
கழியாதுயோமத்திற் காட்டஞ்சுதொந்தனே
ஒழியாதுவெள்ளிமேலொரு மூன்றெடுத்திடே 98

(கெந்தகச்செம்பு)

எடுத்ததோர்சாரத்தை யியல்பாகச்செம்பின்மேல்
கொடுத்திடுவானங் குலாவிப்பதினுறாய்
தொடுத்ததுரைக்கெல்லாஞ் வட்டவெகுதூர
மடுத்திட்டகோடிக்கு மப்பாலேயோடுமே 99

(மயூரச்செம்பு வேறு)

ஓடுமயூரமுருகின்ற கேசத்தை
நாடிநறுக்கி நறைக்காட்டிவிட்டுவை
ஏடயெருமையிதவான சாணியில்
கூடியடைபோலாக் குலாவுயுலர்த்திடே. 100

உலர்த்தியேபாண்டத்தி லுறுசாரம்வெணகரு
குலத்துரிற்றீயாற்கு மையவெரித்தெடு

பிலத்தகுடோரியும் பின்னுஞ்சுமித்திர
மலர்த்தியஞாழத்தி லசையாமலூதிடே 101

ஊதுறவியிலிரண்டு சொர்னத்தைச்
சேதுரசம்விட்டரை சேர்சமனெக்க
ஓதுகடுநெல்லி யுயர்ந்தகாணிச்சாறு
வீதித்திரிதினம் விட்டேயரைத்திடே. 102

அரைத்தேயுருட்டியது மேலேதாஞ்சுத்தி
விரைத்தேநல்லப்பிரேக சத்துக்கழஞ்சியும்
துரைத்தேநல்லண்டத்தோல் வீழ்வர்க்கம்பால்கிட்டம்
பரைத்ததனல்மேலே பாங்காகவூதிடே. 103

பாங்காகக்களச்சம் பனிச்சென்றுகண்டாற்போல்
நீங்காமற்குன்றி நிலைத்தண்ணுமண்டலம்
போங்கானமேனிபொன் போர்புகழுறும்
வாங்காகவெனமா மயேசுரனுவாயே 104

(பூநாகச்சேம்பு)

ஆமிக்களங்கமைஞ் றாற்றிலோகத்தில்
நேமித்துவொட்ட நிலைக்குமையாயிரங்
காமத்தின்விற்கேள் கண்ணுங்களர்கொள்ளச்
சாமத்துரோகப்போஞ் சதாசிவனுவாமே. 105

(பூநாகமேடுக்கும்-வகை)

ஆமேகப்பூமியிலடங்கிய பூநாகம்
தாமேவுவெல்லாந் தான்சாற்றுவரைவைக்கல்
வாமேவுதேசிகன் மலமும்புதைத்திடு
ஒமேநற்பூநாக மொச்சக்கிடைக்குமே 106

கிடைத்ததெடுத்துக் கிளர்ந்திடும்பாலிலே
மடைச்சேனம்மான் மயிடத்தின்சாணியில்
உடைத்தேபடைகட்டி யுருகவுலர்த்திடு
கடைச்சேநற்பாண்டத்திற் கனல்கொண்டெரித்திடே.

எரித்திட்டசாம்பலித மாகக்காடியில்
வரித்திடுவாதக்குடோரி இசைக்கொன்று
மறுத்தஞ்சுமித்திர மடிவாகவில்லைசெய்
பொறுத்திடுஞானத்திற் போட்டங்குவூதிடே. 108

ஊதரவியாயுருகுமது பாரு
பாதகந்திரும் பரிசத்தில்வேதிக்கும்

ஆதித்பரிரண்டுயதிலே யிதுவொன்று
சோதிச்செயரசஞ்சூட்டி யுருக்கிடே- 109
உருக்கியகல்வத்தி லுடைத்துப்பொடியாக்கி
நெருக்கியிதனிடை நீட்டுஜெயகந்தி
பெருக்கியவோரிலைப் பொற்றலைச்சாற்றிலே
செருக்கிவையைந்தினம் சேரவரைத்திடே. 110
அரைத்தேயுலர்த்தி யழகாகப்பில்லைசெய்
உரைத்துகையில் வெண்காரமுந்தான்சேர்த்து
நிறைத்தப்படியேதாரேறு மண்சீலைசெய்
புரைத்தேயுருக்கிப் பூசித்தெடுத்திடே- 111
பூசித்தெடுக்கப் புகழாங்களங்காகும்
நேசித்துக்குன்றை நிலத்தொருமண்டல
மாசித்துவந்திடு மகாயோகிதானுவன்
தேசத்தோர்பொற்றத் திரிவான்கவனமே. 112
கவனமொன்றல்லகர்ணீர் களங்குதா
னவலோகமஞ்சி நாலாயிறற்குத்தான்
மூவசனிசியோடு மூயர்ந்தபசும்பொன்று
மவனித்துயீசனைவணங்கியே செய்திடே. 113

(செம்புப்போன்)

இனிமைநாகமும் லிங்கமதேரசிலை
தனிமையாகிய சாதியிறுல்வரும்
வனிதனுகிய வைங்கோலநெய்யுறில்
புனிதனுணையே செம்பொன்னுகுமே. 114
பொன்னுஞ்செம்புமேற் பூட்டிடுஞ்சூதத்தை
தன்னிரைகெந்தியைத் தாக்கவேகுப்பியில்
மன்னியயந்திரவாலுகை மேல்வைத்துப்
பொன்னடராசனைப் போற்றியெரித்திடே. 115
எரித்திடுசெந்தூரமெடுத்தே தினங்குன்றி
யரித்திடுபாற்சேர வைபத்தியம்பேற
விரித்தமலரோன் விதியும் பொய்யாய்விடு
மரித்தேதிற்போர்க்கு மார்பினிலாணியே. 116

(உருக்குமித்திர தயிலம்-வேறு)

காணுமேமித்திரங் காட்டிறுரிபமூன்று
வேணியமண்டக்கரு வெள்ளைக்குன்றியு

மாணிப்படிகியடவாயரைத்தபின்
நாளுஞ்சதாவிரிநாட்டுடன்தயிலமே 117

தயிலமுமித்திரஞ்சாற்றிடுஞ்சங்குமேல்
தயிலமுமித்திரஞ்சாற்றுஞ்சதாண்டமேல்
தயிலமுமித்திரஞ்சாற்றிவரண்டத்தினில்
தயிலமுமித்திரந்தானுனுஞானமே. 118

ஞானமேமேதாவென்று நலங்காத்தமான்பரே
ஞானத்திலுத்தமம்நல்வங்கருளந்தான்
ஞானத்திலுாதநலங்காக்கரடாகும்
ஞானத்திகாரமு நாட்டியுருக்கிடே. 119

உருக்குமுறைபோலுரிடவண்டத்தை
உருக்குமுறைபோலுரிடுசிப்பியை
உருக்குமுறைபோலுரிடுநண்டோட்டை
உருக்குமுறைபோலுரிடுமெத்தியே. 120

அந்தமுதலாகஅல்லாமாவியாகு
மத்திக்கச்சூதத்தைவாசலைக்கேகொல்லும்
வத்தித்தப்பாத்திரம்வைக்குமுறைபாடு
கத்திப்படாதென்றுகாட்டினர்நந்தியே. 121

நிமிளைச்செம்புசெந்தூரம்.

காட்டுநிமிளையில்காட்டதுமித்திர
மாட்டுமூன்மித்திரம்வளமாய்ப்பிசைந்திட்டு
தாட்டுசதாவேரித்தயிலமுறவார்த்து
ஓட்டியேஞாயத்திலுறவாகவூதிடே. 122

ஊதிடச்செப்பாமுருக்கெட்டுப்போகாது
மாறுகேள்தங்கத்தின்மாட்டிதைச்சேர்சம
ஞாதிசெயமாகுமவ்விடைதான்கூட்டி
சாதித்துவொன்றுகந்தாக்கியுருக்கிடே. 123

உருக்கிடச்செந்தூரமுயர்ந்தவருணன்போல்
தருக்கிடக்கெந்தியுந்தாரமும்வீரமும்
செருக்கிடமூன்றையுஞ்சேரக்குகையில்வை
பருக்கிடப்பருதியின்பசுஞ்செந்தூரமாமே. 124

செந்தூரமானதைசேர்ந்தரவியதி
பந்துறவாகவேபத்துக்கொன்றியவே

வந்தவரையறும்வாகான தங்கமாம்
இந்தமுறைதிருமூலருரைத்ததே. 125
உரைத்தேயெடுத்துஉள்ளடைகுப்பியில்
விரைத்திடுவாலுகைமேல்வைத்துத்தீமூட்டு
துரைத்திடுஅஞ்சாந்துாசுறுசெந்தூரம்
கரைத்திடுகாணிகாயமழியாதே. 126

அழியாதுகாயங்களையாயிரத்தாண்டு
வெளியாநவலோகத்தோராயிரமோடும்
வளியாய்ப்பரிதிக்கமாற்றுப்பதினாறு
தெளியாதயோகிக்குச்சித்தியொன்றில்லையே. 127

(வேறு.)

என்றேவயத்திலெடுத்தவரடிப்பொடி
நன்றாகக்கழுவிநல்லோரிதழ்தாமரை
கொண்றேயிடித்ததில்கூட்டுவேன்கண்டிரும்
பண்டேயிடைகாரிபகர்சாரமாட்டிடே. 128

காந்தச்செம்பு.

மாட்டிப்பிசைந்துமகிழவேமூன்றுநா
ளாட்டிப்பிழிந்துவச்சாற்றிலயமுற
வோட்டியவெய்யலிலுருகவையேழுநாள்
காட்டியகாரங்கலந்துபிசைந்திடே. 129

பிசைந்திடுகோவைபெருங்குறட்டைப்பழ
மசைந்தே 'சைந்துஅமர்ந்திக்குகைவைத்து
பசைந்தவுலைக்குள்ளேபாய்ச்சியுருக்கிட
வசந்தீரவேழ்தரம்வளமாயுருக்கிடே. 130

உருக்குக்குருக்குவுடைத்தேதகறண்யோக்கி
பருக்கும்பழம்ரண்டுபாங்காய்ப்பிசைந்திடு
நெருக்கியுருக்கிடநிச்செயஞ்செம்பாகும்
சுருக்குந்தொழிலென்றுசூட்டினார்நந்தியே. 131

செம்புகளங்குவெட்டைசெந்தூரம்.

சூட்டியசெம்பாலேசூழ்சமன்தங்கஞ்சேர்
மூட்டியகெந்தியுமுனையற்றரூதமும்
நீட்டியெருக்கம்பால்நிலைத்தரைலேகித்து
ஆட்டிப்புடமஞ்சில்தீய்ந்துநூறுங்குமே. 132

நறுங்கியசெம்பைவூதிடரவியின்மேல்
மருங்கிக்கொடுக்கவேமாற்றுப்பதினெட்டாந்
தருங்கிமறுகாலுதற்கிக்குழப்போடே
பொருந்தியசெந்தூரப்போடமுறைகளே. 133

கேளாயபச்செம்புகெடியாய்ப்பலமொன்று
வாளாகுந்தங்கம்வகையிலுகாற்பலம்
மாளாஞ்செயநாகமைந்துஞ்சரிகூட்டி
சூளாஞ்செயகுதஞ்சூட்டிப்பலமொன்றே. 134

பலமானகெந்திபைப்பாய்ச்சியிலுக்கிடை
பலமாங்குமரிப்பால்வார்த்தரைத்திடு
பிலமானவாலுகைபேசாமல்வைத்திடு
குலமாந்தினமாண்டில்கூடுஞ்செந்தூரமே. 135

செந்தூரமொன்றுதிகழ்வெள்ளியாயிர
மந்தித்துருக்கமாற்றுப்பதினாறு
கொந்திபொன்னாகுங்கூட்டுதினங்குன்றி
பந்தித்துத்தின்னப்பத்தஞ்சிற்சித்தியே. 136

சித்திக்குங்காயஞ்செகமெல்லாமெச்சிட
உத்துத்துப்பார்க்கவொளிவிடுமேனிதான்
மத்தித்துலகைவருவான்கெவனந்தான்
புத்திக்குஞ்சித்திக்குப்போக்குமுறையாமே. 177

ஆமேதானிப்படியடவாயப்போலே
போமேநற்செம்பாகிபுகழுற்றகாந்தந்தான்
தாமேவுவேதையுந்தனிக்காயசித்தியும்
வாமேவுகாந்தத்தைவைத்தமுறையாடே. 138

படிகச்செம்புவேறு.

படிகக்கல்லதனைப்பாங்காய்ப்பொடியாக்கி
அடிக்கும்பொடிதானைம்மாபலம்பத்து
நெடியவெண்காரந்திரைதான்மூன்று
கொடியகோராவாரம்வேர்பலமபத்திடே. 139

பத்துப்பலந்தான்பாங்காய்யப்பலம்
மூத்துயர்கற்றாழைவேரோர்பலம்பத்து
ஒத்தஅரைத்துவுறவாய்மும்மூர்த்தியும்
முத்தேநற்றாணிக்கரிப்படவூதிடே. 140

ஊதிப்படிதானொருமூன்றுதாமிதை
பேதித்துக்கல்லுபிரண்டிடுப்வெண்மையா
மாதித்தவெண்மைக்கதினிடைகூதஞ்சேர்
கோதிப்பழச்சாற்றால்குலாவியரைத்திடே. 141

பரிச்செம்பு.

அரைத்தேயதுக்குளடவாங்குடோரியுந்
துரைத்திடுயெட்டொன்றுகூட்டிடுகாரமுந்
தரைத்தேனுருட்டித்தானுங்குகைவைத்து
குரைத்தேகுரையுங்குழம்புமிதிலிடே. 142

இட்டேயுருக்கயியல்பாகச்செம்பாகு
மட்டில்லைவேதைதான்வாக்குக்குமெட்டாது
ஒட்டுமிடையொன்றிலொருநூறுதங்கஞ்சேர்
பட்டுடன்தங்கப்பாரீர்பறிச்செம்பே. 143

பரிச்செம்புவெள்ளிமேற்பாய்ச்சிடுநூற்றொன்று
மரிச்சுரசிதம்வளம்படச்செம்பாகுங்
கரிச்சாவியொன்றுகருநாகமரைத்திடு
மரிச்சகரிநாகமாணிநற்செய்பொன்னே. 144

படிகத்தின்செம்பும்-கெந்தகச்செம்பும்
இதுகளில் களங்குசெந்தூரம்.

செம்பாந்தருநாகஞ்சேர்ந்தயெடையொன்று
வம்பொன்னுநாகமொருநூற்றிலேயிடக்
கொம்பித்தநாகங்கூட்டிக்களங்காகும்
நம்பியேநற்செம்புநாடொறுநூறுக்கே. 145

நூறுக்கொன்றேடிநுகர்ந்துபசும்பொன்னுந்
தாறுற்றவொன்பதுலோகமுந்தங்கமா
மாதுற்றகுன்றியெடைதின்னமண்டலங்
காதுற்றமேனிகழியாதெக்காலமே. 146

காலமாஞ்சொர்ணக்கணேசன்வைரவன்
ஞாலமாந்தேவிசிறக்கவேவார்த்திட
வாலையம்போகர்மலையாமற்காமியஞ்
சாலவுண்டாயிரஞ்சாகாதெக்காலமே. 147.

எக்கிப்படிசத்திறங்குஞ்செம்போர்பத்து
மக்கியகெந்தகச்செம்போர்பலம்பத்துந்

தக்கியசெம்புதானும்பலம்பத்தும்
பக்கிநிமிளைப்பகர்பத்துச்செய்பிதே. 148

செம்பொடுநாற்பதிற்சேர்பத்துத்தங்கத்தை
நம்பொடுமூன்றும்நலமுடன்விக்கிரகம்
கொம்பாமற்பாதத்திற்கொட்டநவலோகம
வம்பானதங்கமாமாற்றுமறுபதே. 149

மாத்தாநவலோகம்வழங்கும்புவியெல்லா
மாத்தானுங்காவின்பாலபிஷேகஞ்செய்திட்டு
சேர்த்தாலொருசேணாதினமூன்றுகொள்வோர்க்கு
காத்தேதுதீயேதுகவனமாஞ்சித்தியே. 150

செந்தூரம்

சித்திக்குஞ்செந்தூரஞ்செப்பினுரென்னந்தி
பத்திப்படிக்குப்பகிர்ந்தவையச்செம்பு
மொத்திக்குங்காந்தமுருவாளநற்றங்க
மத்தித்தவைப்பிரேகச்சத்தந்திடையிடே. 151

இட்டயிடைபோலிதிற்சங்கச்செம்பிடு
இட்டயிடைபோலிதிலண்டச்செம்பிடு
இட்டயிடைநன்றிதமாங்கிலிஞ்சியி
னிட்டயிடையதிலிதமாயுருக்கிடே. 152

உருக்கியபதத்திலொத்தசெயசூதம்
நெருக்குமிடைக்கொக்கநேரேஜெயகெந்தி
பருக்கியசேகரித்தயிலத்திலேயரை
பருக்குமபக்குபகிர்ந்துபுடஞ்செய்யே. 153

செய்தேபுடமஞ்சுதிரச்செந்தூரமாம்
மெய்திடுமொன்பதில்பாயிரத்தொன்றுமே
கைபடாமுன்னேகனகமயமாகும்
பொய்படுஞ்சாவும்போகாதுகாயமே. 154

பத்திரம்.

போகாதபத்திரம்பூட்டமுறைகேளு
வாகானமூன்பத்தும்வளமாமயூரமு
மேகாநிமிளையிசைந்தபூநாகமு
மூகாதகெந்தியுமூதிநற்செம்போடே. 155

எடுத்திடுஞ்செம்புமிதமாய்ப்பதினலு
மடுத்தசெயசூதம்வகையோர்பதினைந்தும்

தொடுத்தேயுருக்கிச்சூட்டிக்குகைவார்த்து
யடுத்தேநல்லாமைமெநயகிற்பூசிவைத்திடே. 156

வைத்தேகுகைக்குள்ளேவளமாமினிநாக
மொய்த்திடத்தங்கமுமிட்டதிற்கெந்தியுங்
குத்தரைரோமநீர்குகையிலுவைத்துமே
ஒத்ததேவிளக்கிடவுயர்ந்தசெந்தூரமே. 157

களங்குசெந்தூரம்.

செந்தூரமொன்றுநிசைலோகத்தாயிரஞ்
சந்திக்கச்சேர்த்துண்ணத்தனிக்காயசித்தியா
மிந்திக்குகைக்குள்ளேயிட்டுநற்சூதத்தைப்
பந்தித்குவூதிடப்பத்தரைகாணுமே. 158

காணுமெப்படிகளங்கங்கள்செந்தூரம்
மாணுங்குருக்கள்வரச்செய்யலாகும்
நாணுமேசூதம்நல்கறக்கட்டுண்ணும்
பேணுமேகாயத்தைப்பிறப்பிறப்பில்லையே. 159

செந்தூரம்—வேறு.

கெந்திரவியுங்கெடியானபூநாகம்
பந்தித்தசூதம்பதியோடிதுநாலும்
வந்தித்தகெந்திவளமாய்சரிசேர்த்து
எந்திப்பழமுமிடுபால்குமரியே. 160

குமரிப்பாலோடேகூட்டுசெருப்படி
யமுரிபொற்றலைச்சாற்றாலரைப்பது
தமரியசாமங்கள்தானெட்டரைப்பது
திமிரியேகுப்பியிற்சேர்த்தங்கெரித்திடே. 161

எரித்திடுசாமமெட்டிரெண்டாகவே
வரித்திடுசெந்தூரம்வருணவருணனுந்
துரத்திடுநாற்றொன்றுகூட்டிடுதங்கமேல்
விரித்தேயிதைப்பின்விடுநாற்றிலொன்றிடே. 162

நவகோடி பரிச்செம்பு.

இட்டேபரிச்செம்பையெடுத்தேகுடவன்மேல்
பட்டியநூற்றொன்றுபோய்ச்சுப்பரியாகு
மெட்டென்றநவலோகத்திடுபதினாயிரங்
கட்டொண்ணுச்செம்பினுகாணிப்படியென்னே. 163

இப்படிகெந்தியெடுப்பாய்மயூரமு
மிப்படிகெந்தியெடுப்பாய்யச்செம்பு
மிப்படிகெந்தியிடுமிந்திக்கோபமு
மிப்படியுங்கழல்மாதனையெடுத்திடே. 164

எடுத்தகுறைக்கெல்லாமெடுத்திடுமேமத்தை
எடுத்தகுறைகேளுமெண்ணுயிரத்திய
எடுத்தகுறையெல்லாமிசைந்துண்ணச்சித்தியாம்
எடுத்தகுறைதின்னவெண்கோடிவாழ்வரே. 165

வாளவேயூநாகம்வாங்கியசெம்புபா
லேளையேயிந்திரகோபமுஞ்செம்பொடு
நீளியகெந்திரவிபோணிமிளையு
மாளியசெம்பாகுமப்படியூதிடே. 166

மித்திரபற்பம்.

ஓரிலைத்தாமரையுறவாமூரியும்
பாரிலைக்கோவைபடர்புலியாரணைகேள்
சீரில்சிறுகீரைசெங்கொடிவேலியு
மாரிச்கெந்திராயதிலங்கியபாதியே. 167

பாதிப்பிடாமூக்கிபகருங்கரிச்சாலை
சோதியசெம்பல்லிசேர்ந்தபதினொன்று
பேதித்துவெவ்வேறுபிழிந்தங்கேவைத்தபின்
ஞாதித்தவைமூன்றில்நாதம்வரும்பாரே. 168

பாரேநற்சாற்றில்பகர்மூன்றுமித்திரம்
நேரேபிசைந்துதிரைநாலுமித்திர
மோரேயுலையிட்டுஊதிடபற்பமா
மாரேயிதனுள்ளேயயமித்திரமிடே. 169

இட்டதிசைக்கொன்றிடுவாய்குடோரியு
மட்டப்பிசைந்துவளமாகவூதிடப்
பட்டேமலப்போக்கிப்பார்ககரவியாகும்
தொட்டமாச்செம்புசூதத்தைக்கொல்லுமே. 170

செந்தூரம்.

கொல்லுமுன்செந்தூரங்கூட்டுமுறைகேளு
நல்லசெயசூதம்நலமாம்பரிச்செய்பு
மெல்லியேமூலிகைச்செம்போடிதுமூன்று
மெல்லாமுறவாயுருக்கியிருக்குமே. 171

இருக்குமணிக்குயெடைக்கெடைசேர்
மருக்கியபொற்றலைமாதளம்பூச்சாறு
நெருக்கும்புரசம்பூநீள்செம்பருத்தம்பூ
பருக்கின்றவங்கிசபாதிச்சாற்வார்த்திடே. 172

வார்த்தேயரைப்பாய்வலமாய்தினமஞ்சு
கோர்த்திடுங்குப்பியிற்கொட்டிடுவாலுகை
எர்த்தேயடுப்பின்மேலெரிப்பாய்தினமொன்று
சேர்த்தேயருணன்போற்செந்தூரமாகுமே. 173

செந்தூரமொன்றுசிறந்தநவலோக
மந்திக்கிலாயிரமடங்காப்பரியாகுங்
கொந்திக்கக்குன்றிதான்கூட்டொருமண்டலஞ்
சிந்தித்தமேனிசிறுகதிர்மேனியே. 174

மேனிபதினொன்றில்வெவ்வேறுதாம்பிரம்
பூனிபேமூன்போலப்பூட்டிடுசெந்தூரங்
காணினவலோகங்காயமூஞ்சித்தியாம்
பாணியேயென்னந்திபகிர்ந்தமூறைபாடே. 175

அயச்செந்தூரம்.

ஊதியசங்கமுடன்னடநண்டொடு
நீல்க்கிழிஞ்சிநிமிளையயச்செப்பு
மாதியகெந்திமயூரமேபூராக
மேதியகாந்தமிடுமிந்திரகோபமே. 176

எடுத்தவயச்செம்புயிதமாய்ப்பதினொன்றும்
படுத்திடுமூலிகைச்செம்பிற்பதினொன்றுங்
கொடுத்துப்பதின்மூன்றுங்கூட்டிருபத்தைந்து
மடுத்தசெயரசமதினோடுருக்கிடே. 177

உருக்கியேகல்வத்துடைத்தும்பொடிசெய்து
நெருக்குமிடைகெந்திநேர்புரதரசுள
னருக்குமுருக்குடனுதிசரக்கொன்றை
பருக்கியமாதளைப்பாங்காங்குமரியே. 178

குமரிப்பூதன்னோடேகூட்டிடுபொற்றலை
அமரப்பழச்சாற்றிலல்லாவளைசப்பூவுந்
திமிரிப்பிழிந்துதினமொன்பதேயரை
தமரித்தகுப்பியிற்ருக்கியடைத்திடே. 179

அடைத்திடு வாலுகையட்வா யெரித்திடு, சடைத்
தேதிளைமூன்று தணவிடச் செந்தூராம், படைத்தேபடு
முன்னே பரிசவேதித்திடுந் திடத்தினில் வீசங்காண்
டின் பீர்தினம் பத்தே. 180

தினம்பத்திற்காயஞ் சித்தியாங்கேசரம, புனம்
பத்துப் புவனங்கள் போவான் கெவனந்தான், அனம்
பத்தரிகரப் பிரமாயிவன் முன்னேமுனம்பத்தி நிற்கவே
மூர்ச்சித்து வீழ்வரே. 181

வீழ்குபதங்கம் விளங்கவுருக்கிடு, ஆழ்கிய செந்
தூர மாயிரத்தொன்றிடு, வாழ்குநற்றுருத்தினை வளமா
கப் பற்றிடு, தாழ்கு நல்தூர்த்தி ரமுக்கொரு தொந்
தமே. 182

தொந்தத்தி லொன்றுகூட்டு நவலோகம், பந்தி
த்து மாற்றுபார்த்தாறு கண்டிடு, இந்தத்துரைபொன்
போலெத்துறைக்குமில்லே, எந்தித்த செம்பிலெடுத்த
குகைகளே. 183

செம்புக்குகை

குகைவார்க்க முன்செம்பு கூட்டிருபத்திரண்டு,
வகையாகத் தங்கம் வளமாகவெட்டிடு, துகையாக முப்
பது கூட்டக்குகைவார்த்து பகைதீரப்பார்த்ததைப் பார்
த்து வணங்கிடே. 184

வணங்குஞ்சரக்கு வகையான தெட்டெட்டும்,
பிணங்கிய லோகம் பிலமான தொன்பதுந், தணங்கிக்
குகைக்கிட்டுத் தணலாகச் செந்தூரங், குணங்கொள்ள
லோகத்திற் கோடிக்கும்வேதையே. 185

வேதைக்குளுத்தம மெய்க்குமகாசித்தி, மாதைக்
குகைக்குள்ளே வைக்கு முன்குதஞ்சாட், பாதைக்கவன
மாம் பரிசவேதித்திடு, மோதக்குளிகைக்கு வொப்பொ
ன்றுமில்லையே. 186

மூலிகைசயம்-வேறு

முறையாக மீயமுளைக்கவே மூலிகைத், துரையாம்
பொன்னுங் காணிகுழுஞ் சுரைசிந்தி, மறையாம்வீழுதி

மருவுஞ்சிறுபூளை, கரையாஞ்செருப்படி காட்டுமூசுட்டையே. 187

மூசுட்டையுடனே மூத்தெருக்கன்செவி, ஓசிட்டவுத்தாமணியுயர் வெள்ளைச்சாறணை, பசிட்டவெள்ளறுகு பாங்காய்ப்பதினென்று மசிட்டவேரே சித்தநில் ரசம்வாங்கிடே. 188

வாங்கியதுக்குள்ளே மாட்டுநால்மித்திரம், பாங்காய்குடோரி பகருந்திசைக்கொன்று, ஓங்கியுருகியுருகப் புடமிட்டுத், தாங்காமலூற்றத் தப்பாதுயீயமே-

ஈயமிடை யொன்றொளிபோரிடை, மாயநல்நாகம் வளமாகவோரிடை, காயக்கனககக்கலந்தே யிடையொன்று, ஆயுஞ்செயசூதமதின் மூன்றிடையிடே. 190

கற்பாசித்துபதங்கம்

இட்டேயுறவா யிதமாயுருக்கிட்டு, மட்டாகக்கெந்தி வளமாய்ச்சரிகூட்டி, ஒட்டாய்ப்பிடித்துவுறவிடு குப்பியிற், கட்டான்வாலுகை காட்டித்தணல் மூட்டே.

மூட்டதுசாமமுகில் போலேசெந்தூரங், காட்டேயொருநூறு கனகநவலோகம், தீட்டவேகுன்றி திளம் இன்னமண்டல, மூட்டவேசத்தியா முயர்ந்தமுறைபாடே. 192

முறைபாடுகேளநீ மூவகையீயத்தால், அரையாய்த்திரிவங்க மனுகிடக்கட்டுண்ணு, மறையான சூதமும் வாசனைக் கேசாகுங், குறையாக்குளியாங் கோடிக்கும் வேதையே. 193

வேறு

கற்பாசிசத்து காணீரிடைநாலு பற்பவளப்புற்று பகுந்ததிடைமூன்று, நற்பானகெந்திதா னூட்டுமிடையொன்று, வற்பாங்குடோரி வரிசையரைகூட்டே.

கூட்டியரைத்துகுழப்பியதுமூன்று, மூட்டியெரிக்கவருதிப் பதங்கமாம், நீட்டும்பதங்கம் நிறைந்தயிடையொன்று, ஆட்டியகற்பாசி சத்தது நாலிலே 154

நாலொன்றுமைந்தும் நற்றங்கமொன்றதை, எலென்ற கட்டியிருநாக மொன்றரை, வாலொன்றுசூதம்

வளமாக மூன்றிடை, பாலொன்றிப்பார்க்கப் பதினொன்றும்பாருமே. 196

குளிகை

பாருமிதுவெல்லாம் பகுத்தநற்கல்வத்தில், வாருமந்திஷ்டி வளமாமழிஞ்சிவேர், பேருயரோரண்டம் பிளிகெந்தியித்திருதி, ஏருயர்வெண்ணைச்சி யெருமையின் வெண்ணெயே. 197

வெண்ணெய்யுடனே விருத்தபழங்காடி, கண்ணிய காஞ்சோறி காட்டாய் முசல்ரத்த, மண்ணைக்கரைக்குமகத்தாந்திராவக, முண்ணியகோசல மொக்கப் பதினொன்றே. 198

அரைப்பீர்தினமொன்று அடவாய்ப்பதினொன்று விரைப்பீர்மயூரம் விளங்கிய செம்பொன்னுந், திரப்பியவெள்ளி திசையிட்டுருக்கியே, கரைப்பீர்பரணி போற்காணிதைச்செய்திடே. 199

செய்தசிமிளில் முன்சேர்த்தமருந்தூட்டி அய்தவடைத்து வதுமேலாகக்கூட்டியே, மெய்தவசோகவிருட்சத்தின் மூலம்வை, மைதொரு மண்டலம் பாங்காய் புதைத்திடே. 200

புதைத்தேசெய்திட்டுப்பொங்கமாகாரத்தை, மதத்தேநற்சித்தர்கள்வாராமற்கட்டிடும், நிதத்தேசிவபூசை நீளன்னதானஞ்செய், பதத்தேயெடுத்தபின்பாங்காங் குளிகையே. 201

குளிகைநிறுக்கக்கூறுபதினொன்று, மளிவெல்லாம் போக்குமதிலுடவர்னங்கேள், தெளியாகும்வெள்ளை சிவப்புகருப்போடும், நளுவாதபச்சை நாட்டும்பசுமையே. 202

பசுமையோடைந்தும் பகுந்தகுளிகைப்பேர், பசுமைதரித்திரம் பத்துங்கமலினி, வசுமையாயிட்டுவாய் நீர்படிலொக்கும், பசுமையாய்மாற்றுவோர் பத்துடனைம்பதே. 203

ஐம்பதென்றல்லவதின்வித்தைமெத்தக்கேள், வன் பதித்துத்தான் வளமையாய்க்குளிர்ந்திடுந், தன்படுவாரி

திசணத்திலேவற்றிடு, யென்படுதேகமெடுக்குங் கெவனமே. 204

எடுக்குங்கெவனமிருத்திடவாயிலே, மடுக்குஞ்சலமூண்ணமாயா துகாயந்தான், ஒடுக்குந்தெரிசனமொன்பதும்லோகத்தில், அடுக்குங்குளிகைமேலப்பா லொன்றில்லேயே. 205

## வேறு.

அழிஞ்சில்தயிலம்-

அழிஞ்சியெருக்குவதனீர்புரசோடு, கழுஞ்சியமுள்ளிகடுங்கண்டங்கத்தூரி, வெழுஞ்சியகுன்றி வெள்ளைக்கருங்குன்றியாம், தெழுஞ்சிம் மாறகந் தேவநற்ருளியே. 206

தாளியிஞேடுசாரணையின்பூவுமத்தை, ஆளியகஞ்சாவடவானவேரண்ட, மாளியபுன்னை மாலாவாலுவைகேள், நாளீர்சமன்கூட்டி நாட்டியுரைத்திடே. 207

அரைத்தமருந்துகேளந்தவேர்சாறேடே, விரைக்கிடவெள்ளாட்டுப்பாலும்விட்டேயரை, உரைக்கவேதாலத்திலூறவைப்பாய்வெய்யலில் சுரைக்குந்தயிலமாய்த்தானேவடியுமே. 208

ரசகுளிகை.

வடிஞ்சதயிலம் வகைபாய்ப்பலமொன்று, கடிஞ்சிடுஞ்சூதத்தைக் காட்டுபலமொன்று, உடிஞ்சகல்லூனை யூறவைத்துமெள்ளு, படிஞ்சக்குளிகையாம் பாரிதான் வேமே. 209

வேகவராகம்விளங்குநல்மாண்டலைப், பாகுநற்குக்கிடம்பகிர்ந்ததலைமூன்று, மேகமாய்க்கூட்டி யெடுத்தே தயிலத்தை, வாகாய்குளிகைக்குவார்த்திடுரெம்பவே.

வார்த்தேயடுப்பில்வளமாகக்காய்ச்சிட, கோர்த்தே குடிகைக்குங் குளிகைமுகங்காட்டு, மேர்த்தேநல்வாயிலிருக்கவதிசய, மார்த்துஞ்சலவன்னிவாக்குந்தம்பிக்குமே

தம்பிக்குஞ்சுக்கிலஞ்சகலவசியமாம், வம்பிந்திரிநாகம்வாசனைக்கேகட்டுங், கொம்பிக்கெவனங் கொடுபோகும்போரிந்து, நம்பித்தசாரணை நாட்டுமுறைகேளே.

சாறணை.

சாறணை செய்யவே சாற்றுமருந்துகேள், தோறணை வாழை துணையாங் கொடுவேலி, ஆறணமுள்ளங்கி யமைந்தஆடாதோடை, மோறணையூமத்து முறிப்பா யார்க்கமே. 213

மார்க்கத்திற்றுழைவன் தேவதாளியும், ஏர்க்குற்ற வெள்ளுயிதமாஞ் சதுர்க்கள்ளி, போர்க்கம்புரசுபுனலின்முருங்கைகேள், சீர்க்கொடிக்கள்ளி சிம்புராவெச் சமே. 214

எச்சமுதலாயிதமாகவெவ்வேறு, உச்சிதமாய்ச்சுட்டுஒவ்வொன்றுவெவ்வேருய், வைச்சவகைக்கு வளமாய்ப் படியொன்று, கச்சயபாண்டத்துள் கணக்காகப் போட்டிடே. 215

போட்டேயரி புகட்டுபதினைந்து, நீட்டேநற்கோமியம் நினைவாய்ப்பதினைந்து, ஊட்டேகமுதையுறவாடுமானையு, மாட்டேவகைக்கைந்து வளமாம்படி தானே. 216

படிநாற்பத்தைந்தாம்பாங்காமமுரிபு, மடிவாமுன் சாம்பலில் வார்த்தேகரைத்திடு, வடிவாய்த்தெளிவை வளமாகக்காச்சையிற், படிவாய்க்குழம்பு பதங்கண்டு காய்ச்சிடே. 217

காச்சுங்குழம்புக்குள் காட்டுதெடியுப்பு, ஓச்சிபசாரமுடன்சீனங்கல்லுப்பு, மாச்சியமிந்துப்பு வழங்குநவாச்சாரந், தாழ்ச்சியெவாட்சாரஞ்சத்தியட்சாரமே. 218

சத்தியாம்பஞ்சலவணங்கடனுரை, மத்தியவன்னபேதிவகையெல்லாய், ஒத்தவிடைதானேரொன்று வைம்பலம், உத்தேபொடித்து வுருக்கக்குழம்பிடே. 219

குழம்பிலிடவேகூட்டும்பலகெந்தி, குழம்பிற் பலம்வீரங் கொடுஞ்சங்குசுன்னமுங், குழம்பிலெருக்கம் பால் கூட்டுபடியொன்று குழம்பினிற்காச்சிக் குலாவி யுருட்டிடே. 220

உருட்டியேபீங்கானினுள் வைத்துமூடிடு, நெருட்டியேநெல்லுக்குழியிற்புதைத்திடு, கருட்டியபட்சங்க

டந்தபின்வாங்கிடு, மருட்டிடுசாரணை மகத்தாம்புட மிடே. 221

புடத்திலிதைவிட்டாற் பெரியபுடமில்லை, நடத்த திறலேநலமானசாரணை, கடத்திடுவாலையுங் கட்டிய சூதமும், உடத்தில்வெவ்வேறு யூட்டிவிடுவையே. 222

விடுவிக்கமார்க்கங்கேள் விளங்குமகாசூதம், அடு வித்தமூசையிலாடியுருகையில், கொடிகட்டுங் கெந்தி யைக்கூட்டிக்கிருவணம், நடுமட்டறிந்து நாட்டுபுடத் தையே. 223

நலக்கறச்சூதநல்லரவியுண்டு, பிலக்குமேதீபனம் பெரியமுகமாகும், மலக்கறவுப்பிற் கச்சத்து மூதலெல் லாம், நிலக்கறவெவ்வேறாய் நீட்டிவிடுவையே. 224

விட்டபின்லோகங்கள்விரிந்துவிரித்து, மட்டபின் மூலிகை செம்பிட்டுப்போக்கிடு, நட்டமணிசூதம் நல மாக்களையேறு, மொட்டியரத்தினமொக்கப்பரிகூட்டே.

கூட்டுமுறைபாடு குலாவுபரிச்செம்பு, நீட்டிய வொன்றுக்கு நிரைமூன்றுரத்தின, மூட்டக்கிராவண மொக்கக்குடோரியுந், தாட்டித்திசைக்கொன்று தாக்கி யுருக்கிடே. 226

உருக்கிடும்ரத்தினமொன்பதுமப்படி, பருக்கிடுவச் சிரம் பரியுஞ்சரிகூட்டி, நெருக்குங்கபாலப்பொடியுங் குடோரியுந், தருக்கியுருக்கிடச்சார்ந்துவுறவாமே. 227

உறவானரத்தினமொன்றுசூதத்திற்கு, நிறைபாய் சரிகூட்டி நீட்டிப்புடமிட்டு, அறையாங்குகைக்குள்ளே யாட்டிவிடுத்திடத், துறையானசூதஞ்சோதிமயமாமே.

மயமானசூதத்தில்மாட்டிப்பரிச்செம்பை, நயமாய் விடுவிக்க நல்லவருணனும், பயமானதெல்லாம்போம் பாருஞ்சிவரூப, மூயமான அஷ்டாங்கமொருகோடி சித்தியே. 229

சித்துவிதங்கேழ்க்கச் செப்பினுரென்னந்தி, உத்த மூன் சாறணை யொருநாறுக்கேயொடு, மத்தானடாந்தர் மவளமாகவாய், மூத்தமூணுந்தா மூப்பதுக்கோடுமே.

ஓடிநாற்சாரணை யுயர்ந்தவொருலட்சம், நீடும்பா ரைந்து நிகராமொருகோடி, யோடு மூரைத்துண வொளியாதுகாயந்தான், வாடுங்குகைக்கு மகத்துவங் கோடியே. 2:0

மகத்துவங்கேசரம் வளமானபூரகந், தகத்துமெ தித்தாரை தப்பாக்கெவணமா, மூகத்தினவலோகமுமி யப்பசும்பொன்னும், அகத்திடும்பாவத்தை யாதிசிவ னுமே. 231

ஆதியாம்வாலைக்கடவானசாரணை, போதலேமுன் போற் போடாய்வரிசையாய், நீதியாய்மேனிநிறை யாய்ச்சிவப்போடுஞ், சாதியாம்வாலையிற் சதகோடியோ டுமே. 233

ஓடுநவலோக மொருபொட்டிலம்மா, நாடுங்கடு குண்ண நடனில்லைபார்பாரு, வாடியிளைத்து மயங்கிய மாண்பரே, கோடியிற்கோடி வெகுகோடிசித்தியே. 234

சித்துக்குமூலங்கேள் சேர்ந்தநற்சாரணை, சித்துக் குமூலங்கேள் சேர்ந்தநற்பீசங்கேள், சித்துக்கிதாண டுஞ் சேராதகாலத்திற், சித்துக்கங்கொன்றில்லைச் சேர் வீழல்கேளே. 235

கிராவணம்.

கேளாய்சிலைகெந்தி கெடிதாநிமிளையும், வாளான பூநாகம் வளமானக்ராந்தமு, நாளாயிவையைந்தும் நல மாய்ச்சரிகூட்டி, காளானரோமநீர்க்கஞ்சத்தயிலமே.

தயிலத்தைக்குத்தி தன்னைக்கமத்தித்து, மயிலைக் குகைக்குள்ளே வளமாகப்பூசிட்டு, எயிலத்துக்கட்டிய சூதமேதாகிலும், பயிலத்துவைத்ததிற்பாங்கயுருக்கிடே

வேறு.

உருக்குமுகத்தி லுறவிடுசத்துகே, ளுருக்குமுகத்தி லுறவிடுலோகங்கள், உருக்குமுகத்தி லுறவிடுசெய்புக, ளுருக்குமுகத்தி லூட்டிடுதங்கமே. 238

கங்கங்களிய்ந்தது சாரணையானபின், பங்காயரத் தினம் பாங்காய்விடுவிப்பாய், எங்கெங்குஞ்சாரணை போற்றிட நாரேறுடும், பங்கமாயிரம்பதினுயிரங்கோடியே

வேறு.

ஓட்டுங்களங்க மூயர்ந்திடுஞ்செந்தூரம், பாட்டுவ்வோர் பற்பம் பகிர்ந்ததுரைக்கெல்லாம், நாட்டியேவாங்கி நல மாகவேதிக்க, காட்டினுரென்னந்தி கிருவணவித்தையே. 240

பிச்சுவகைகள்.

வித்தையிற்பன்றி விளங்குங்குதிரைதான், கொத்தியகோழி, குலாவியவாடானை, மூத்திபெருமை மூடமுங்கும்பசுகாக்காய், பத்துமனிதனும் பாங்காந்தவளேயே.

பாங்காய்மயூரம் பதமாகவெவ்வேறு, வாங்காய்நீ பித்தெல்லாம் வளமாய்யுலர்த்திடு, ஆங்கமனுசரவெங்கடாமாடு, ஓங்காக்குரும்பியொரு மூன்றில்வாங்கிடே.

வாங்கும்புழுகு வளமாய்முலைப்பாலு, தேங்கியகேனுந்திரண்டமெழுகோடு, பாங்கேதநாகம் பரிவானசுக்கில, மோங்குமூமாரி யுயர்வானவாய்நீரே. 243

நீரானகாரம் நிலையாம்வெடியுப்பு, காரானசாரங் கவரிசவ்வீரமாம், வேரானபூரமும் விளங்கியவெண்கண்டா, ஆராணவெள்ளை யதிமதுரமிடே. 244

இட்டமருந்தெல்லா மினத்துக்கோர்காசெடை, மட்டாகநல்லெண்ணெய் வார்த்தரைக்காற்படி, தொட்டவசப்புச்சாற் சூட்டதிற்காற்படி, ஒட்டக்குழைத்துவுறவாகவைத்திடே. 245

வைத்திடுதாளகத்தாலேயிருவங்க, மொய்த்திடப்போட்டு புழுங்கவறுத்திடு, கைத்திடுநாகத்திற் காட்டுமனேசிலை, யுத்தேயுருக்க வுறுதியாம்பற்பமே. 246

பற்பமிதுமூன்றும் பகுந்தொருகாசெடை, பப்பியகுன்றி பருப்பொருகாசெடை, ஒப்பியரைத்து ஊட்டிக்குழப்போடே, செப்பியடுப்பேற்றிச் சேரக்கொதிப்பியே.

கொதித்தபதத்தோடே கூட்டிமெழுகாக்கி, அதித்தசிமிலடைக்கிற் கிராவணப், பதித்தசரக்கும் பழுக்காக்கனகமு, மதித்துன்னேவாங்கி மலையும்பழுக்குமே. 248

வாதக்குடோரி.

கோடிக்குறைக்கெல்லாங் கூட்டவுருக்கினம், போடு பலமதுபூநீறிணங்களும், நாடிப்பலம்ரெண்டு நலக்கா மேயவரை, எடியவெள்ளை யிதற்குச்சரிகூட்டே. 249

கூட்டியவெள்ளை குலாவியரண்டிடை, ஊட்டிடுதாளக மூருகப்பொடிசெய்து, நீட்டியெருக்கம்பால் நீள்வெயிலேழுநாள், ஓட்டியவாலுகை யுணர்வாயெரித்திடே. 250

எரிப்பதுநாழிகை யிருமூன்றுசாம, மருக்கிடமேலே வளமாய்ப் பதங்கிக்கு, நெருக்கியமாதக்குடோரியிதன்பேர், செருக்குமூன்செப்புக்குஞ் சேர்ந்தநற்சத்துக்கே. 251

சத்தையுருக்கச் சகலமூநீராக்கு, மத்தித்தபீங்காலும் வச்சிரக்கல்செங்க, லுத்தேயுறுமண லுபரசமெல்லாங்கேள், சத்தேபடுமுன்னே தண்ணீர்படுமுன்னே.

தண்ணீரைப்போலே சகலமூருக்கிடு, மூன்றேருரைத்த மூழங்குந்துறைக்கெல்லாங், கண்ணியசெம்புகனசத்துவங்கேள், எண்ணிமறவாம லிடுவாய்திசைக்கொன்றே. 253

வேறு-காரக்குடோரி.

பூரமோவோரிடை புகழ்வீரம்ரண்டிடை, பாரியமாணிப்பால் பகிர்ந்தேயரைத்ததைக், காரியின்மேற்பூசிகாட்டுரவிபடி, தாரியிற்காரந் தப்பாதுகட்டுமே. 254

கட்டியகாரங் கனத்தயிடைமூன்று, மட்டுக்கருரெங்கு வளமாகவோரிடை, திட்டமாய் வாதகுடோரிதிசைபத்து ஒட்டியரைத்து வுறவாய்ப்பொடிபண்ணே.

பண்ணிச்சிமிழில் பாங்காயடைத்தபின், எண்ணியவெத்தநமினமா முருக்கினந், தண்ணியலோகத்தைச் சமைக்குநலம் போகா, தொண்ணக்களை கூட்டியுருக்குமிதுபாரே. 256

பாரேயிதுகுரு பட்டதெல்லாஞ்சாகும், வாரேதுரத்தின மணியாயொளிதருஞ், சீரோதுமுன்னே செகத்திலுருக்கினம், வாரேதுகாரக்குடோரி யிதுவாமே. 257

வேறு—மால்தேவிசத்து.

செங்கருவாலேசேர்த்ததுமால்தேவி, பங்கறநோக்கிப் பகிர்ந்தேயரைத்திடு, வெங்கயவில்லைபோல் விளங்கவுலர்த்திடு, சங்கைகேள் தாளகந் தானுறவாகுமே. 258

எட்டோடுவாதக்குடோரியுமொன்றிடு, திட்டமாய் வில்லைதான் சேரவுலர்த்திடு, கட்டியகாரங்கானும் பலம்நாலு, தட்டியசாரந்தானுமிருபதே. 259

இருபத்துநான்கு மிளையவேவெண்கரு, மருவியரைத்து வளமாசக்கிள்ளியே, கருவிலெட்டொன்று காண் பூசிவில்லைவை, தெரியவுமேலிந்த சேர்ந்தபொடி தூவே. 260

தூவியமுந்தி சூட்டியடுப்பில்வை, பாவனையாகப் பகுத்தெட்டால் மூன்றுநாள், தாவியபன்றிநெய் தானதின்மேலிட்டு, தாவிதெரிசிக்கச் சத்தாஞ்செயமிதே.

தாளகச்சத்துக்களங்கம்.

செயமானசத்திலே சேர்க்கவெகுதொழில், செயமானசத்திலே சேர்த்திடுங்கின்னரிதான், செயமானசத்திலே செயமாம்ரசங்குரு, செயமானமாமூதற் சேரவுருக்குமே. 262

உருக்கியசத்துக்கு வொத்தவிடைதங்க, மருவியுருகையில் மாட்டுசெவ்வீரத்தை, பருதிக்களங்காகும்பஞ்சமலோகத்திற், சொருக்கிடு நூற்றொன்று சுத்தபசும்பொன்னே. 263

பொன்னுமிடையொன்று போடதிற்சத்தொன்று, மன்னுமிரும்பொன்று மாட்டொன்றுநாகந்தான், பன்னியுருக்கையிற் பாச்சிடைலிங்கத்தை, தன்னியவீரருந் தாக்கக்களங்காமே. 264

களங்கம்நவலோகங் காட்டவோராயிரங், களங்காரமாற்றுந், தானேபதினாறு, வளம்பெறவிப்படி வகைகள்வேறுமெத்த, உளம்பெறுசித்தியா மொளியாதுகாயமே. 265

தாளகசத்தில் கிண்ணி.

காயப்படைத்தோர்க்குக் காட்டினார்பாத்திரம், மாயாமல்தேவிவளமானசத்தாலே, பாயவேகிண்ணிபோற் பருந்தங்குவார்த்திடு, ஓயாதகிண்ணியி லொருகோடி வேதையே. 266

வேதைநரசிதம் விளங்குமுறைகேளு, ஆதையாஞ் சூதமதனைவார்கிண்ணியிற், போதவேவாலுகை பூட்டி யெரித்திட, மாதேகேள்சூதமகத்தாங்குருவிதே. 267

குருவிலே நூற்றொன்று கூட்டிடுவங்கத்தை, குருவிலேநூற்றொன்று கூட்டிடுசெம்பின்மேல், குருவிலே நூற்றொன்று கூட்டிடுநாகத்திற், குருவால்ரசிதந்தான் கூறையனுசீனமே. 268

உரைத்திடுசுன்னமீ ருறுகொள்ளுப்பால்தயிர், விரைத்திடுங்கூழ்ப்பாண்டம் வெறுநீர்ச்சரக்காடி, ஆரைத்தூ ஆகத்தி விரைவேர்த்துயிலமூந, அரத்தியேதாசிகஞ் சருக்கிடச்சுத்தியே. 269

தாளக சுத்தி.

சுத்தித்தாளகஞ் சூட்டிடுசத்துக்கு, சுத்தித்தாளகஞ் சூட்டிடுசெந்தூரஞ், சுத்தித்தாளகஞ் சூட்டுகுரு நூறை, சுத்தியில்லாவிடிற் றுறையொன்றுமாகாதே.

கட்டிபாகாரங் கலந்துயிடைபத்து, மட்டியவாத குடோரியுமொன்பது, வெட்டியதாளகச் சத்தாமிடை யெட்டு, ஒட்டியவீர மூருகுமிடையேழே. 271

இடையாறிதிற்கூட்டு யிதமானவெண்காரம், படையானசாரம் பகர்ந்திடுமைந்திடை, யுடையாமிணங்க லுறுநாலிடையதில், குடையாங்குருரெங்க கூட்டுமிடைமூனே. 272

(?)ணிலமேழு மூட்டுமிடைரண்டு, ஆணியகுன்றிப் பருப்புமிடையொன்று, ஊணியதேனி லுருகவரைத் திடு, பேணித்திசைகாரக் குடோரியின்பேரே. 273

பேராந்துறைக்குப் பெலத்தகுருவிது, வாராயுந்தா றது வெறுப்பதுங்கட்டுண்ணும், பூராயமான சரக்குகள் நீறிடும், பீராங்குருபாச னிதற்குமேலில்லையே. 274

இல்லைஇதற்குமே லெடுத்ததுரைக்கெல்லா, மில்லை யிதுவிட்டா லெய்தாதுவாதந்தான், இல்லையிதுமேலே மூகமுமில்லை, இல்லையுருக்கினமிதை விட்டானந்திமே.

உருக்குமித்திரம்.

நந்தியுரைத்தார் நலமாய்த்துரைக்கெல்லாம், பந்தி யவாதத்திற் பகுந்ததிசைகுரு, ஒந்திப்பரிசன மூறுதிப் பண்லேபனம், முந்திப்பழக்குமுருக்கினங்கேளுமே.

உருக்குந்துறைகேளு வுபரசம்நூற்றெட்டு, பருக் கியலோகமும் பாங்கானமண்மணல், கருக்கியமூலிகை காணுமுன்செம்பாகுஞ் செருக்கியகல்லதுதி சேரவுருக் குமே. 277

ஒன்றானமித்திர மூலகத்தில்வெண்காரந், தெவரு ணரண்டுசேர் காரசாரமும், பன்றானமூன்று படிகியுடன் குன்றி, வன்றானவெண்கரு வாரியேமூன்றிதே. 278

ஆகவேநாலு மணைந்திடமித்திரம், போகவெசா ரம் புகுந்திடுமிந்துப்பு, தாகவேவெண்ணை தனித்தயெ ருகொடு, யோகமுநாலு முறவாபரைத்திடே. 279

உறவானகுன்றியுடன்றே னல்வெல்லங், கறவான காரங் கலந்திடுநெய்யொடு, துறையாமுகமெல்லாஞ் சூடடஞ்சுமித்திரம், நிறையாகநந்திநேராயுரைத்ததே.

வேறு-வச்சிரகுரு.

பசுவிளங்கன்றின் பாங்காமலத்தோடு, தசுமைபாய்த் தொட்டு தானேயிலகிட்டு, வசுமையவச்சிர மேலே பொதிந்திதை, யசுமியவண்டப் பொடிக்கீழ்மேலிடே.

இட்டேகுகைமூடி யிதமாகவூதிடே, பட்டானவச்சி ரம் வளமாய்க்குருவாகும், தொட்டமகாகுரு சூட்சமறி வார்க்குப், பட்டவுடன்சூதம் பதையாமற்சாகுமே. 282

சிவக்கின்றதங்கத்தைத் தேய்த்தநலலோகம், பவக் குறைதீர்ந்து பத்தரைமாற்றாகும், துவக்கியசூதக குரு மேலேதொந்திக்க, நவக்கவிறக்கும் நவகோடிசூதமே.

சூதம்.

சூதமிறந்தபின் சுழன்றதுவாதந்தான், சூதமிற

தபின் சொர்ணமாங்காயந் தான், சூதமிறந் தபின்சுகமாங் கொணந்தான், சூதமிறந்தநீ துலையாதவேதையே.

சுத்தித்தெந்தகஞ் சூட்டும்பலம்பத்து, பத்தித்த ஆடு தின்றப்பாளையுப்டைபத்து, ஒத்தித்துக்கூட்டி யுற வாய்க்குமரிச்சாற், குத்தியேபவஞ்சாங் குலாவியரைத் திடே. 285

அரைத்துவுருட்டிய லரவுலர்த்திடு, விரைத்திடு சீலையு, மேலேதா னால்சுத்தி, தரத்தியசீந்தி சர்க்கரை யமற்கட்டி, பரத்தியசீந்திச்சாற் பானையில்வார்த்திடே.

வார்த்திடப்பானைவாய் வண்டதுகட்டியே, சேர்த் திட்டவுண்டைவை சீரோட்டைமேல்மூடு, வேர்த்திட் டடுப்பிலெரித்திடிருசாம மார்த்திட்டபிட்டாகும் வாங்கி யுலர்த்திடே. 287

உலர்த்துமுன்சீலையி லொட்டாமல்வாங்கிடு, மலர் த்திட்பின் மாதளை விரைத்தயிலம்பூசு, பெலத்திடுபோக கிற் பேசாமற்கட்டிடு, மலத்தித்தினம்பூசி யைந்தாநாட் கட்டிடே. 288

துரிசிகுரு.

கட்டியெடுத்துக் காட்டுங்குமரிச்சாற், ஒட்டியரைப் புவுறவாகவஞ்சாம, மட்டியபீங்கானில் வளமாகப்பூ சிட்டு, தட்டுமேல் தூக்கிடு சந்திரன் காணவே. 289

காணவேசந்திரன் கசிந்துசலம்வீழும், தாணிபோ ல்குப்பித்துத் தூக்கிடுகிண்ணியை, வாணைவாய்வாரிதி போலேதிறிகுவி, காணியவெய்யலிற் காச்சாந்திருதியே

திருதியுலர்ந்து சேர்ந்துகுருவாகு, மறியவேகெந் திக் குருகாணுமம்மம்மா, பொருந்தியாஞ்சூதந்தான் போடுமுன்கட்டுண்ணும், நெறிதிரந்தாதுக் கணிமிஷை த்திற்கட்டுமே. 291

கட்டுஞ்சகலமுங் காணுமுன்வேதிக்குந், தெட்டி டைகுன்றியிடை தின்னச்சித்தியாம், பட்டும்படாமுன் னே பரிசத்திலவேதையாம் ஒட்டுங்குருவேதை யொரு குருக்கில்லையே. 292

மாகவேவெண்ணீருங், குடையானவாதத்தின் குருவா
மூறையாரே. 301

மூறையாங் குருக்கொண்டு மூட்டுசரக்கெல்லாங்,
குறையாமற்கட்டுண்டு கொடிக்கும்வேதையாம், துறை
யாந்தளைழக்கெல்லாஞ் சூட்டிடச்சார்வரு, மறையான
சூத மணிபோலக்கட்டுமே. 302

கட்டுங்குளிகை கவனங்கொடுபோகும், கட்டுங்குளி
கைகலந்து வசியமாய், கட்டுங்குளிகை காட்டச்சுரூபி
யாங், கட்டுங்குளிகைக்குக் கரையில்லைவேதையே. 303

மூலிகையில் சாறுவரக்குளிகை.

பூராகமூளிகை பூவகையானதில், வாராதசாறு வர
வேகுருகேளு, நேரானகாந்தத்தி னீட்டுபெருக்கம்பால்
பாராய்திளைமைந்து பாவித்துலர்த்திடே. 304

உலர்த்திபோகல்மத மூறக்காட்டத்தீபத்தில், விலர்
த்தித்தையிலமாம் விடுமதிலீரரரை, கலர்த்தியகாரமேற்
காணவேபூசிட்டு, துலர்த்தியவெய்யலிற் சூழவுலர்த்
திடே. 305

உலர்த்திக்குருபண்ணை வுறவானவுப்புகேள், பலத்
தபரமார்க்கம் பெருநீர்படியொன்று, கலத்தங்கதலிக்
கிழங்குச்சாற்நாற்படி, உலர்த்திக்கரைத்து வுளைதேத்
தூங்கொட்டையே. 306

பூரகுரு,

கொட்டையுரைத்துக் குலாவித்தெளிவூடே, மட்
டானபூரம் வளமாய்ப்பலமிட்டு, நிட்டையாய்க்காச்சி
நிற்குங்குருபூரம், தொட்டதளைமெல்லாஞ் சொற்குரு
வாகுமே. 307

ஆமேமுடக்கத்தா னடவான நீர்படி, போமேநற்
கோமியம் புகட்டும்படிநாலு, தாமேகரைத்துத் தயவா
ய்த்தெளிவிறு, காமேவுவெண்காரங் கரைப்பாய் பல
மொன்றே. 308

காரலவண குரு.

கறைத்தேயுறக்காகச் சக்களங்கற்றுவெண்மையாம்
தரைத்தநலக்கார லவணச்குருவிது, மூறைத்தேதழையு

முறிந்துசலம்வரும், பறத்தேகுருமூன்றும் பாங்காய்ப் பலமூன்றே. 309

கண்டார்.

மூன்றுகுருவுக்கு முதலாமகாகுரு, நீன்றியகூட னிறைபோக வாய்நீரில், ஊன்றியரைத்து வுறப்பூசுகா ண்டார்மேல், காண்ட வெயிற்படக் கனமாய்ப்பொரு மூமே. 310

துரிசுகுரு.

பொருமுந்துரிசு போகாமல்வாங்கிடு, அருமைத் துரிசு குருபற்பமாமது, முருமைப்பலமொன்று மன் குருமுன்பலம், பொழிமிக்கநாலு முறவாயரைத்திடே.

இரைத்தபலம்நாலு மரைப்பலம்வீரமுந், காத்தே பொடித்துச் சாத்திச்சிமிழில்வை, விரைத்தமகாகுரு வேண்டியபூத்தழை, நாத்தேடமூன்னே தண்ணீருந் தப்பாதே. 312

தப்பாமல்சாறுதான் வன்னமாய்வரும், ஒப்பாய்க் குருமூன்னே யொருகுறவுமில்லை, இப்பால்தழைமுத லெடுத்ததுரைக்கெல்லாம், அப்பாமேற் சொன்னதை அறியவே பூட்டிடே. 313

பூட்டியேயிப்படி யுறவாகிவிட்டிடுங், காட்டியகாட் சிமெழுகாய் கரைந்திடும் போட்டிடமூளிகை புதிதச்சா ருய்விடும், நீட்டியபூச்சாறு நிமிஷத்தில்மயினமே.

தங்கமும் அப்பிரேகமும் கிண்ணியில்சூதம்

தங்கமிடையொன்று தானேயுருகையில், பொங்கி யவப்பிரேக மிடைரண்டிடு, அங்கியுருகையி லதுவாரு கிண்ணியில் நற்சூதம்வார்த்திடே. 315

வார்த்திடுகிண்ணியை வாலுகைமேல்வைத்து, ஏத் தாசதுர்முகக் குருவினிலெட்டொன்று, வாத்தியவைலம் பாலதனில்நிறையவார், தோத்தியசொம்பாலே சுழல வறுத்திடே. 316

வறுத்திடச்சூதமகாகுருவாயிடும், குறித்திடுங்குன் றியிடைதின்னமண்டலம், மறிந்திடுஞ்சாவு வாராதொ

ருநாளும், சிழுத்து நவலோகந் தெரிக்கவே வே
தையே. 317

சாரநீர்

சாரம்பலமொன்று தனிக்காடிமோர்பலம், வீரம்
பலமொன்று வெள்ளாண்டத்தோலரை, நேராகநாலும்
நிமிர்ந்தரைவாய்நீரி, லோரேயுருட்டி யுணரப்புட
மிடே. 318

தாளகம்

இட்டமருந்தை யியல்பாய்ப்பனியில்வை, கட்டிய
சாரநீர் காணுமிதுபாரு, ஒட்டியநீரி லொருகோடிவே
தைகேள், மட்டில்லாத்தானகம்வளம்பெறச்சத்தாமே.

தொந்தம்.

சத்தாம்வகைகேழ்க்கச் சாற்றிறுரென்னந்தி, எத்
தானதாளகத் துடனே துயக்காந்தமத்தானகாரம் வகை
க்கோர்வாரகன்கேள் பத்தானரெங்கு பணவிடைபோட்
டிடே. 320

போட்டேயரைப்பாய் புகழ்சாரநீரிலே மாட்டே
குகையில் வளமாகவைத்தூது ஒட்டேயுருகி யொரும
ணியாய்நிற்குந் தாட்டேமணிக்கிடை தாளகங்கூட்
டிடே. 321

இட்டமருந்தி னியல்பானகாரந்தான் மட்டாய்வ
ராகன் வழங்கியரெங்குதான் குட்டாகரெண்டு குன்றியி
டைகூட்டி தொட்டேசெயநீரால் சூட்டியரைத்திடே.

அரைத்தேயுருட்டி யடவாயுருக்கிடு தரைத்தேகுளி
கைக்குச் சரிகூட்டுதாளகம் விரைத்திடுமுன்னிடை கார
மும்ரெங்கிடு பரத்தேயுருக்கினம் பதினறதாம்பாரே.

பாரேசெயநீர் பதினறதாய்விடு பாரேநற்காரம்
பதினறதாம்விடு பாரேபாரெங்கு பதினறதாம்விடுபாரே
யிஞ்சத்து பரிசத்தின்வேதையே. 324

வேதைபிறந்தது விடுபட்டதேசிபோ லாதிப்பரி
யொன்று மாகினைசத்தொன்று மாதித்தநாகமு மாட்டுமி
டையொன்று சோதியாய்வீரமுஞ்சூட்டாயிடைரண்டே

இட்டயிடையைந்து மிதமாய்ச்செயநீரில் மட்டா
யரைத்து வளமாகவில்லைசெய் ஒட்டிக்கிளிஞ்சியி லுண
ர்வாய்ப்புடஞ்செய்ய தொட்டகுருவொன்று சொன்னு
ரென்னந்தியே. 326

சூதகுரு.

நந்தியுரைத்த நலமாங்குருவிலே சந்தேகந்திரச்
சமனுகச்சூதஞ்சே ரந்தித்துஅந்தி யரைத்தேபுடமிட
பந்திக்குருசூதம் பரிசனவேதையே. 327

வேதைரசகுரு விடுவாய்நவலோகம் பேதிக்குமாயி
ரம்பெருமாந்திருபதாம் வாதிக்குமெச்சி மருத்துவமா
னது ஆதிக்குருவென்று அறிவோர்பெரியோரே. 328

பெரியோரரியவே பேரானசத்துகேள் அறிவான
வங்கத்தி லதுபத்துக்கொன்றிடு தருவானவங்கத்தைத்
தாக்குபதிமத்திற் கருவாய்மதியொன்று களங்கையெடு
த்திடே. 329

எடுப்பாய்மதிமுன்னிடு வங்கமவ்வொன்று மடுப்
பாய்முன்சத்தொன்று வாள்வீரந்தானென்று தொடுப்
பானசூதஞ் சூட்டதில்வரண்டிடை நெடுப்பாஞ்செய
நீரில் நீட்டியரைத்திடே. 330

அரைத்தேயுருட்டி யடவாயுலர்த்திடு விரைத்தே
யிழைசீலைமேல்சுத்தி நூல்சுத்து தரைத்தேநற்சிலைமண்
சாத்துதனிமூன்று கரைத்தேபுடப்போடக் காணீர்குரு
வாமே. 331

குருவிலொருவிடை கூட்டுறவங்கத்திற் றருவிய
சீனஞ் சதமாகுந்தப்பாது அரிவைக்குயீசனன்றேயுரை
த்து மருவியயேமரசிதவழிபாடே. 332

ஈயவகை.

வளியாம்ரசிதக்குருவாலுபரசங் களிவானசுக்கான்
காந்தமணியுந் தெளிவானபிரேகஞ் செங்கால்நண்டோ
டிவை எளிதாகப்பூசிட் டிடுபுடமீயமே. 333

ஈயம்பிறக்கு மெடுத்தசரக்கெல்லாங் காயமும்லோ
கமுங் காட்டுமுன்சித்தியா யாயுப்பெரியோர்கள் வைத்

ளம்வைசிறுதமர் குப்பிவை, உரட்டியசீலை மண்ணுறு யாய்ச் செய்திடே. 662

செய்தடுப்பேற்றித் தீயிட்டெரித்திடிற், கொய்து புகையோடே கொப்பளிக்குஞ்சலம், பைதிடுரோமத் திராவகம்பாரிது, ஐதுபுகைமாறிலப்பா லெடுத்திடே.

எடுத்தயிடைபோ லெல்லாச்சரக்கிலு,மடுத்ததிராவகம் வார்த்தங் குலர்த்திடு, கொடுத்தகலயத்திற்கு ணில்லாது யிந்தநீர், படுத்தே யெரித்திட்டுப் பாராய்புகை நீரே. 664

பாராய்நீ யிப்படிபாச்சைந்து தொந்தனை, நேராய் நற்குப்பிக்கு ணில்லாது மிந்தநீர், தாராபரக்கிற் சமைத்திடு பாத்திர, மோராய்த் திராவகமுத்தி யடைத்திடே

அடைத்த திராவகத்தனைந்தந்துறைகேளு, உடைத்தகுதத் துறவாக வெண்ணீருங், கடைத்திடு தங்கமூங் காட்டியணைத்திடு, படைத்த நவலோகம் பாச்சபாசம் பொன்னே. 666

பொன்னைச் சிவமாக்கும்பூட்டிடு தாதுக்கள், மன்னயசத்தாய் வளமாக வந்திடுந், தன்னையினங் கண்டு சாற்றத் துறைதோறுங், கன்னயவேதை கறையில்லை நந்தியே. 667

நந்தியுரைத்த நலமாய்த் திராவகந், சந்தேகந்திரத் தங்கஞ் சிவமாக்கி, பந்திய சூதத்திற் பாச்சமணியாகும், பொந்தித்த சாரணைபோட்டிட வேதையே.

போட்டிடு சாரணைபுகட்டு நவலோகம், போட்டிடு சாரணைபுகழ் தாதுசத்தெல்லாம், போட்டிடு சாரணை போவியரைத்தினம், போட்டிடு சாரணை பொங்கும் வெகுதாரமே. 669

தாரமேமோடிடுஞ் சொர்ணமயமாகுந், தாரமுமொக்குந் தனிச்சூதங்கட்டிடு, லாராயச் சூதத்தனைத் திடச்சாரணை, பாராய் மகாவேதை பாரும் பெரியோரே.

பெரியோர்க்குச் சொன்னது பேரானசாரணை, அரிதாகக்கேச மடங்காக் கெவனமாம், பரிவாகச் சாரணை

பாச்சாத சூதந்தான், மரியாகும் வேதைமாற் றென்று மில்லையே. 671

காரியஞ்சாரியுங் கலந்தயிணங்கனுந், தாரிவகைக் குக்கேள் தானே யொருநூறு, பாருஞ்சரக்கினைப் பாக மாய்ச் சுத்தித்து, ஆரியகேசமளவொருநூறிடே.

வேறு தயிலம்

நூரோடிருபது நூகர்ந்த வெருக்கம்பால், தாரோ டரைத்து தப்பிடுகேசமே, லாரோடலர்த்தியரைத் தடை குப்பியில், ஆறொடு பூப்புடமது தான் தயிலமே. 673

தயிலத்தில் வேதைசாற்றிஞ் ரென்னந்தி, வியலுற் றகாந்தம் விளங்கு மரப்பொடி, பயிலுற்ற மாயப்பல மது வொவ்வொன்று, அயிலிப்பி சறியருக்கனில் வை த்திடே. 674

வைத்ததுகாரம் வளமாந்துரிசியும், உத்தேபிசறி யுருக்கிடு வெண்திர, மத்தயங்காந்த மரும்பிமணியாகுங் கைத்தே யுருக்கக் கனமா மிரும்புக்கே. 675

இரும்புடன் செம்பிலிசைந்தே யுருக்கிடு, தரும்பு மினிக்காலிற் சாறொன்று கெந்தகம், அரும்புத் தயிலத் தாலரைத்ததைத் தப்பிக்கும் திருப்புந் திசையெல்லாஞ் சேரக் களங்கமே. 676

கனகமிடையொன்று காயச்செம்புமுளர, தனகவு ருக்கிச் சாற்றொன்று நல்லிங்கம், பனகவெடுத்துப் பாச் சிடு வெள்ளியில், அனகிய மாற்றுவாகுங் கனகமே.

இரும்பில் வேதை

கனகம்பிறக்குங் கனத்த விருப்பிலே, கனகம் பிறக் குங் கருநாக மூள்கிடிற், கனகம்பிறக்குங் கட்டுண்டாக ந்தான், கனகம் பிறக்கக் கலர்சூத வேதையே. 678

வேதை பிறந்தவிதஞ் சொன்னேனந்தி, வேதை பிறந்த விதமேயறிந்திலாய், வேதை பிறக்க விளங்கிய லோகத்தில், வேதையறிந்தோர் விண்ணவர்க் கீசனே.

ஈசனிருப்பது ஏமத்தொழிலிலே, ஈசனிருப்பதினி மூன்றுசாரத்தில், ஈசனிருப்பதினங் கனல்சாரத்தில், ஈசனிருப்ப தியல்பாந் துரிசுமே. 680

ஆரிசியோடாறுஞ் சூட்டக்குருவாகுந், ஆரிசியோடாறுந் துறைக்கெல்லாந்தாயாகுந், ஆரிசியோடாறுஞ் சூதமறிந்திலார், ஆரிசியோடாறுஞ் சுரூபஞ்சிவமாமே.

ஆமேநற்றுளக மடவாயிருப்பது, வாமேயாகுதம் வளமாகப்பத்திடுந், தாமேவுகாரந்தனையொருவஞ்சிடு, பூமேவுசாரம புகழ்பெறவைந்திடே. 682

இட்டிடுவீர இதமாகமூன்றிடு, ஓட்டிடுரோமத் தயிலத்திலேயரை, பட்டிடச்சாரம் பதையாமல்மத்தித்து, கொட்டிடுசொடியில் குப்பியில்வைத்திடே. 683

வைத்திடுகுப்பிமேல் மாட்டிடு பொற்கிண்ணி, பொத்திடுசந்துக்குப் பூசிடுசீலைமண், கைத்திடதீமூட்டிக் கனலெரிமூச்சாமம், மொய்த்திவேறி மூழங்கும்பதங்கமே. 684

பதங்கத்திலோரிடை பாய்ச்சுநூற் நாகத்தில், அதங்கக்குநாத மதனூறுக்கொன்றிடு, விதங்காணிதுரண்டு மெய்யுறக்கட்டுண்ணுஞ், சதங்காணிதுவேதை தப்பாதுபாருமே. 685

பாருமேயின்னுகம் பகுந்துநூற்சூதத்திற், சேருமேமெள்ளச் செயமாகச்சூதமுஞ், சாருமேரணடுயினங் செந்தூரஞ், சோருமேநூறு சகத்திரவேதையே. 686

வேதித்துக்கட்டி விளங்குங்கருநாகம், போதிக்கச்சூதத்திற் பூட்டைமபத்தொன்று, மேதித்தரைக்க விளங்கிடுஞ்சூதஞ்சா, மாதினங்கூட்டி வளமாய்க்களங்கிடே. 687

எடுத்தகளங்கை யிசைந்திடுலோகத்தில், தொடுத்தநாகத்தொன்று சூட்டப்பசும்பொன்னு, மடுத்ததுறையெல்லாமவ்வி மூப்போடேகொடுத்தே கொடுக்குமூனகும்ரென்று வாஙகுமே. 688

வாங்கியதங்கம் வளமாகவைந்திடை, பாங்குகருநாகம் பாச்சதிலேந்திடை, ஓங்கியலிங்க மூறவிடுவைந்திடை, தேங்கியவீரரை சேர்ோரிடையிடே. 689

இட்டேயெடுத்து யிதமாய்ப்பொடிசெய்து, மட்டேயரைவாசி மாட்டிதிற்சூதத்தை, கட்டேநல்ரோமத்

தயிலங்கலந்தரை, கொட்டேகுகையினிற் குழுறப்புடஞ் செய்தே. 690

செய்தபுடமொன்று தீர்க்கக்களங்காகும், எய்திடு நவலோகத்திடு வைம்பதுக்கொன்று, கொய்திடுமூறல் போய்க் குலாவிப்பசும்பொன்னும், உய்திடு வேதை யொருகோடிசித்தியே. 691

சித்திக்குமின்னந்திறஞ் சொன்னே ரென்னந்தி, சித்திக்குரிய திறமதுரைக்கக்கேள், கதிக்குங்காட்டா மணக்கின் பருப்பெண்ணே, பத்தித்தலோகம் பரவி யுருக்கிடே. 692

உருக்கியயியமா முயர்ந்தவயங்கேளு, பருக்கிடு காந்தம் டரையானவப்பிரேக, மருக்கவுபாசமெல்லா மிருதுவாகுஞ், சொருக்கியினங்கண்டு சோரச் செந் தூரமே. 693

செந்தூரமானதைச்சேர்க்கநவலோக, மந்தவினங் கண்டு வணக்கப் பசும்பொன்னும், தந்தையுந்தாயுஞ் சாற்றுதுறைக்கெடு, அந்தயினத்துக் கினங்கண்டறிந் திடே. 694

அறிந்தவினத்தோ டறியாததாலத்தில், பிறிந்திடு வர்ணம் பேய்க்கூத்தாய்வாதம்போஞ், சொரிநதுமயங் கிச் சுடுகின்றமான்பபர, எரிந்தேகுருமுக மெய்துநீபார் த்திடே. 695

பார்க்கவேமுன்சொன்ன பதங்கத்திற்பேதங்கேள் சேர்க்கவேவெள்ளை சிறந்தவிருபது, ஆர்க்கவேகுத மதனிலரைவாசி, மார்க்கவேசாரம் வளமாகக்காலிட்டே.

காலிடைசாரங் கலமரைக்கால்வீர, மேலிடையெல் லாம் விளங்கநிறுத்திடு, கோலிடைநாற்பது ரெண்ட ரையாங்கூட்டி, சாரடைரோமத் தயிலத்தரைத்திட்டே.

அரைத்தேதுற்சட்டி யடவாய்தடுவைத்து, விரைத் தேநலவெள்ளிக் கிண்ணியைமேல்மூடி, தரத்தேநற் சந்துக்குத் தப்பிடுசீலைமண், அரத்தேமுசாமஞ் சூட்டி யெரித்திடே.

எரித்திடவெள்ளைத் தூளெறிப்பதங்கிக்குந், தரித் திடச்சந்திரன் போலரசிதமா மரித்திடு வங்கத்தில மாட்டொன்பதுக்கொன்று, பாத்திடுவங்கம் பறையா மற்சாகுமே. 699

சாகின்ற வங்கத்திற் சாற்றும்பலமொன்று, மாகின்ற சூதமனையிதிலோர்பணம், தாகின்ற வப்பிரேகச் சத்ததிற காரநல், மாகின்ற தாளக மாட்டுபலங்காலே.

காற்பலங்கட்டின வெள்ளை கலந்திடு, காற்பலங் கட்டின வீரங்கலந்திடு, காற்பலங்கட்டின சாரங்கலந் திடு, காற்பலங் கள்ளிப்பால் காணீரரைத்திடே. 701

அரைத்திடு நாற்சாம மடங்காத வர்க்கம்பால், அரைத்திடு குப்பியிற் சூட்டிடுவாலுகை, உரைத்திடு திதாஙுலரவே யெண்சாமம், பருத்திடு குப்பியிற்பாங் காய்க்களங்கிடே. 702

களங்கமோராறிடை காட்டு நற்செம்பிலே, தளங் கிய வங்கத்திலாயிரத் தொன்றுதான, இளங்கு மிரும்பி லிருபதுக் கொன்றிடு, வளங்கிடு வெள்ளியா மாற்று பதினாறே. 703

அய வுருக்கினம்

இரும்புப்பொடியை யிசைந்தபழச்சாற்றில், வரும் பவரைத்து வசவெல்லாம் போக்கிடு, இரும்பவுலர்த் தித்திறத்திடு மூன்பலங், கருப்பி யுருக்கக் காட்டினார் நந்தியே. 704

காட்டிய வாளங் கனத்த மூக்காசிடை, ஓட்டிய காட்டாமணைக்குமூக்காசிடை, நீட்டியவப்பிரேகவிடையு மூக்காசிடை, பூட்டுபுரசம் விரையுமூக்காசிடே. 705

மூக்காசிடைதான் முழங்குமயநாக, மூக்காசிடை தான் முழுவானையின்கொம்பு, மூக்காசிடைதான் முசவிட வத்தியு, மூக்காசிடைதான் முழுக்கலங்கொம் பிடே. 706

கொம்பாங்கிஷத்தின் கூர்மை மூக்காசிடை, வம் பாந்தவளை வழும்புமூக்காசிடை, தெம்பானபச்சோந்தி

பிச்சதோர் காசிடை, தெம்பாக மூன்றுந்தெளிவாய் மூக்காசெடே. 707

காசிடைமூன்றுங் கடுங்கீழாநெல்லிவேர், காசிடை மூன்று காச்சு நற்கெந்தகம், காசிடைமூன்றுங் கலந்திடு பூநாகங், காசிடைமூன்றுங் கலப்பாய் நிமிளையே.

கலப்பாயிதிற்கெந்தி காசிடை மூன்றுதான், கலப்பாயிதில் ரசங் காசிடை மூன்றுதான், கலப்பாயிதில் வீரங்காசிடை மூன்றுதான், குலப்பாய மூரியின்கூர்மை மூக்காசிடே. 709

இடைபோல் மூக்காசிடை யிடுவதில் சாரந்தான், இடைபோல் மூக்காசிடையிடுவா யிணங்களை, இடைபோலறுகாசுவேதிடுகாரமே. 710

காரத்தோ டெல்லாங் கலந்தேயிறுத்திடு, பார்த்தி சம்பழச்சாற்ருற்பகுந்தரை, ஆர்த்தே மூப்பலம்லோகமதிற்கூட்டி, நேர்ந்தேகாரம் நீட்டு பலமொன்றே. 711

ஒன்ருய்க்குழப்பி யொருகுகைக்கே வைத்து, நன்ருய்ச்சில்லிட்டு நலக்கவே மண்பூசி, தன்ருன தாக்குலேசமையவேயூதிடு, கன்ருயவென்னந்தி காணேருருக்கிதே.

உருக்கியுடைத்து வூட்டு முன்போலே, பருக்கவுருக்கிடு பதிணையிரந்தான், நெருக்கியதங்கம்போல் நின்றுடுங் கண்விட்டு, வருக்குஞ் சவுடுதிரையெல்லாமற்றதே. 713

அயச்கெந்தூரம்

அத்தயிரும்புதாணுயிர மாற்றுகு மத்தயிரும்புமசையா அவப்புக்கு, பத்த யிரும்புபலவித வேதைக்காம், அத்தயிரும்புக்களவில்லை வேதையே. 714

வேதைக் கினந்தான் விளம்பிறைரென்னந்தி, ஆதிச்செயநாக மதனோடிரும்பியுஞ், சாதித்தகாந்தந் தன்னோடிரும்புஞ்சேர், சோதித்த செம்போடு சூட்டாயிரும்பையே. 715

இரும்பொடுகாரீய மிகவாயுருக்கிடு, இரும்பொடு வெள்ளீய மிசையவுருக்கிடு, இரும்பொடிசையக்கவுரியுருக்கிடு, இரும்பொடு பூநகாமிசைவாகச் செம்பிடே.

உருக்கிடு கெந்தகச் செம்புமிருப்பையு, முருக்கிடு வெப்பிரேகச் செம்புமிரும்பையு, மூருக்கிடு தொட்டியு மூறவா மிருப்பையும், உருக்கி டிரும்பையுறவாஞ் சிலை யோடே. 717

உருவாமிரும்பினி லூட்டிடுலிங்கத்தை, உறவா மிரும்பி லூட்டிடு வீரத்தை, உறவாமிரும்பினி லூட்டிடு சூதத்தை, உறவாமிரும்பினி லூட்டுமயூரமே. 718

ஊட்டு நிமிளையு மொவ்வொன்று வெவ்வேறாய், ஆட்டியுருக்கி யதற்குத்தினங்கேளு, நாட்டிய சூதம் நலமானதாய் கெந்தி, ஆட்டிடு தாளகங்குலாவிச் சிலையிடே. 719

இட்டே பொடித்து யிவையெல்லாம் வெவ்வேறாய், பட்டேய யக்குப்பி மாட்டிவை வாலுகை, பட்டே யெரித்துப் பதம்பாரு செந்தூரங், கட்டேயினஞ் சேர்த்துக்காண அருணனே. 720

அருணனிறமாமை மூன்றோர் செந்தூரம், வருணனைப்போலே வருடிக்குஞ் சொர்ணந்தான் கருணையுடன் கொள்ளக் காயமழியாது தருணநவலோகந் தாக்க மூறைகேளே. 721

கெந்தக செம்பு

மூறையான செந்தூரமூட்டிட வேதைகேள்,வறையானமாற்றுவஞ் சொருவைம்பதாங், குறையாதிது தான் குமட்டாது வுப்புக்கு துறையா யறிந்து சூட்டிச் சுகத்திடே. 722

சுகிக்கச் சந்தோஷிக்கத் தாரவழியோடி, தரித்திரந் தான் போகத் தன்காயஞ் சித்திக்கச், சகிக்கச் சிவயோகந்தான் சிவனாய்நிற்க, மூகிக்கின்ற கெந்தகச் செம்பினால் முத்தியே. 723

கெந்தகச் செப்புகெடியாக வாங்கிடச், சந்தேகந் தீர்ந்து சாற்றினேனென்னந்தி, பத்திய கெந்தகம் பலம் படித் தெடுத்ததில், உந்திச்சுரோணித மூறவாயரைத் திடே. 724

அரைத்திட வேழுநாளப்பியே மேற்கேளு, பரித்திடு தரசப்பூவினிலேழுநாள், கரைத்திடு கண்டங் கதலிச்சாறேழுநாள், இரைத்திட மூன்றுநாளெலுமிச்சஞ் சாற்விடே. 725

விட்டரை ரத்தத்தயிலத்திலேழுநாள், ஒட்டியகரா முறவாகப் பாதிசேர், மட்டியசாரத் துரிசிசே ரெட்டொன்று, திட்டையாய்வில்லைபோல் நிமிரவுருட்டிடே

உருட்டிய வில்லையை யூதிடுளைத்தில், தெருட்டியே யோட்டினிற் றீரவங்கமுடன், இருட்டறமும் முறையெழிலா யுருக்கிடு, செருட்டிய செம்புபோற் சேருமட்டுதிடே. 727

ஊதிட வூதிட வொருநூற்றுக் கொன்றேயா, மாதிடமாய்வந்த மகாாகச்செய்பிது, பேதிடத்தங்கந்தான் பேருலகொவ்வாது, தாதிடவம்பலந் தாண்டவந்தானிதே. 728

தாண்டவம் பார்க்கத்தாக்கிறே மிச்செம்பை, ஆண்டவன் சொன்னடங்காதிதில்வேதை, பூண்டதோர் கோடிபோகிடுங் காணிக்கு நீண்டதிந்தவேதை நிலைகண்டோர் சித்தரே. 729

நிலையான மூன்கெந்தி நீட்டு அரைக்கெல்லா, மலையாதேமாண்பமே வளமானசத்தது, குலையாங்குறிகண்டு கூட்டுரசத்தையுந், அலையாதிதின் வேதை சொற்பத்திற் சித்தியே. 730

சித்திக்கச் சத்தையுஞ் சேர்க்கவினங்கேளு, ஒத்தித்த கெந்தகச் சத்திலே நாகஞ்சா, மூத்திக்க காரியமுதல்வங்கஞ் சோத்திடு, பத்தித்த சூதத்தைப் பதையாமற் கட்டுமே. 731

கட்டியகெந்தகச் சத்தினினங்கேளு, மட்டிடு அங்கம் வழங்கு மயங்காந்தம், விட்டிடுவெள்ளி வெறுஞ் செம்பு பித்தளை, ஒட்டியவாறுக்கு முறவான கெந்தியே.

கெந்தியின் வேதைகேட்டிடக் கேட்டிட, உத்தி குளிர்ந்து வுடம்பெல்லாம் பூரிக்கும், கொந்தித்தச் சூ

த்தைக் கூட்டுமுன்னே கொல்லும், பந்தித்ததேவி பரி வானநாகமே. 733

சத்துரு

பரிவான லோகத்திற் பாங்காவதைந்துகேள், மரி வாக நாகம் வழங்குங் குருநாகந், தெரிவானதேறிசிறந் தபரிவஞ்சுஞ், சொரிவாயினங் கூட்டத்தோராது வுப் புக்கே. 734

மித்துரு

தோராவுபரசஞ் சொல்லுள்ள காந்தமும், நேரா னவப்பிரேக நிமிளை மயிற்றுத்தம், பாராம்படிகக் கல்ப குந்தயிதுவைந்து, மாரவுபர சத்தின் குணம் நீகாணே.

காணே நற்பாஷாணங் கடியசரக்கைந்தும், பாணே நற் கெந்தகம் பாங்காமரிதாரம், பூணே நல்வீரம் புக ழுற்ற முத்தோடு, மாணே நல்லிங்க மைந்துஞ் சருக் கென்னே. 736

சருக்காம் பதினைந்து துய்ய அரிதாரம், நெருக் காப்பதினாறு நீள் சடையோனுக்கு, மருக்காக்கணையாய் வணங்கிச் சுசோடச, முறுக்காயறிந்துபா ருயர்ந்திடுஞ் சித்தரே. 737

வங்கமுதல் நாகம்வழங்கு நிமிளையு, மங்கிய கண் டரும் வழங்குங் கெவுரியும், பொங்குஞ் சவுட்டுப்பு பொல்லா வெடியுப்பு, தங்கிய சிங்கியுந்தாளகம் பொல் லாதே. 738

பொல்லாத வண்டப்புகழுங்கிளிஞ்சியுங், கல்லாஞ் சிலாசத்து கடுஞ்சூதமப்பிரேக, மல்லா நிமிளை வருத்த திரைப்பல், மல்லான கோமுகமாதிப் பொன்னும் பரே. 739

லோகத்துக்குச் சத்துரு

பறையான வீரம்பகுந்தநரிசி நீர், அறையான துங் கத்துக்காகா விதுவெல்லா, முறையாமற் கொன்று வழுஞ்சிடுஞ் சத்துரு, அறையாத தெல்லாஞ் சொர்ன மித்துரு வென்னே. 740

இரும்புக்குச் சத்துருவேற்றிரு ரென்னந்தி, அரு ம்பிய வண்டத்தின் கோடுவெப்பிரேகம், தரும்புக்கிளிஞ் சிதனித்துரு வெண்கலங், கரும் ய கெந்திகடி தான தாரமே. 741

தாரத்துடன் சிங்கிதயங்காச்சிலைவீரம், பாரொத்தி ணங்கள் பகையாஞ் சவுட்டுப்பு, மாருத்திருப்புக்கு மாட்டாது வாகாதே, காரற்ற மற்றெல்லாங் காட்டிடு மித்துரே. 742

மித்துரு நாகம் வெள்ளி மூதற்செம்பு, வத்துரு காந்த மடங்காக் கெவுரியும், பத்துரி நாகம் பறந்தமயூ ரஞ்சேர், பத்துருக் கெந்திரவியறி வற்றமே. 743

நாகத்தின் மித்துருநாக் காந்தலோகமுந், தாக நிமிளை தனிச்சூதங் கெந்தியும், பாகத்தினப் பிரேகம் பாரிற்சிலாசத்து, வாரொத்த பூநாகம் வளமாமயூரமே.

என்ன நற்சார மிளகியவப்போடு, மன்னேகருநாகம் வாங்காக் கெவுரியும், கன்னேசெயலிங்கங் கசடற்றசெம் போடு, மன்னே நல் நாகத்தின் வளமான மித்துரே.

வளமாங் குறிஞ்சி மலத்தின் சலக்கூர்மை, பள மாம் வெடியுப்பு பகுந்தண்டஞ் சீனமூங், களமானவங் கங் கடுதுரா வெள்ளிபொன், தளமான வீரஞ்சத்து ராஞ்சேரற்கே. 746

கருநாகஞ் சத்துருகாந்த மயம்வற்ற, மருவாநிமி ளைவாகான நண்டோடு, மருவாங்கிளிஞ்சி யப்பிரேகங் கெந்தி, இருவாம் வெடியுப்புச் சுன்னமூந்துத்தமே.

துத்தந் துரிசி சூழ்ந்திடு கல்நாரும், பத்தறுமகத்தை படையாமல் வக்கிராந்தம், செத்தாறும் வெள்ளைசேர்த் துறுகாரீயஞ், செத்தக் குதிரைப்பல் சேரப்பதையிதே.

பகைபோகில் மித்துருபாயு மிணங்களும், வகை யானபூநாகம்ம யூரமகாநாகந், தகையான சோரந்தனச் சூதம் வெள்ளிதான், துகையாங் கருநாகஞ் கூட்டிடது மித்துரே. 749

வங்கத்தின் மித்துரு

சூட்டக் கருநாகஞ் சுகமானலோகத்தில், ஆட்டிய கல்மிச மெல்லாந் தகர்த்திட்டு, மூட்டிகத் தங்கத்தை மூனை நதியாவாங்கும், பாட்டிய கள்ளம்போம் பாரிதி னுண்மையே. 750

வங்கத்தின் மித்துருவாம் சூதந்துத்தமும், பங்கக் கருநாகம் பாராயபக்காந்தம், நங்கித்தநாகம் நலமான கல்நாறு, பொங்கித்து வெல்லாம்பூட்ட வுறவென்னே.

உறுவல்ல சத்துரு வுரைத்தா ரென்னந்தி, கற வெல்லது தங்கங்களிந்த நவலோக, மறவல்ல நட்புமற் றவுபரசந், அறுவல்ல தெல்லாஞ் சூட்டக் கெடுக்குமே.

எந்தரவிக்கு மிசையாத சத்துரு, பந்திக்கருநாகம் பாங்காந்திமிளையுந், தந்திக்கு வங்கந்தனி வெள்ளைச் சிங்கியு, முந்தித்ததாளக மூடன் கெந்தியாகாதே. 753

ஆகாதுபட்சி யடுத்த கருந்தொட்டி, பாகான வஞ் சுணம் பண்ணைத் தொடுப்புத்து, வேகல்முறு வல்விளங் கிய கார்முகில், வாகாய்க் களங்கெல்லாம் வாய்க்காது செம்புக்கே. 754

ஆகுமே சூதமதில் வீரம்லிங்கமும், வாகிடுமப்பிரே கம் வளமான கெந்தியும், பாகுமேசிலை பகுந்தகெவுரி யும், போகுமே தாரமும் பூட்டப் பசும்பொன்னே.

பசுமையாம் வெள்ளிக்குப் பாங்காகச் சத்துரு, வசு மைய வங்கமடங்காது சோரங்கேன், தசுமை திமிளை தனிக்கெந்தி கற்பறி, மிசுமை வெடியுப்பு மிதுபோலு மாகாதே. 756

ஆகாதுசார மடங்காக்குதிரைப்பல், போகாமுறிச் சல் பொரல்லாப் புளியுப்பு, வேகாதவப்பிரேகம் வெள் ளைமுதலாகா, வாகாயமற்றெல்லா மட்டாய் பசும் பொன்னே. 757

காந்தத்தின் சத்துருகடுங் கெந்திமால்தேவி, போந் தசிலையோடு போல்லாமிருதாறு, மாந்தகெவுரிய மக்கி

ராந்தஞ்சாரம், பாந்தித்த மஞ்சனம் பலகையாமிணங்கனே. 758

இணங்கிய வங்கமியலாஞ்சவுட்டுப்பு, பிணங்கிய வண்டம் பேரானநண்டோடு, தணங்கிய கார்முகில் சவர்க்காரச் சுன்னமூ, மணங்கிய காந்தத்துக் காகாது வாகாதே. 759

ஆகாத்அராவுக்கு மாகாநுமால்வெள்ளை, வாகாநிமிளைவழங்கும வெடியுப்பு, போகாச்சிலாசத்து பொன்னம்பர்கெந்தியும், பாகானவண்டமும் பாங்காகச் சத்துரே. 760

பாங்கானசோரம் பலமாமினிலிங்கந் தாங்காக்க வுரிதனிவீரம்பூநாகம், ஓங்காவிரும்பு வொழுக்கை யோர்கொட்டி, வாங்கான இராவுக்கு வாதியினமிதே.

இனமானபித்தளைக் கோராநுநீர்கேளு, மனமான வண்டங்கள் வங்கஞ்சிலாசத்து, கனமானகற்சிலைகவுரி கடல்நுரை, இனமானவெள்ளை தான்சேராதசத்துரே.

சேரவேபொன்னுகஞ் சேர்ந்தவினங்கேளு, ஆரவேசாரமடி யுப்புவெண்காரம், பாரவேலிங்கம் பகுந்த நவலோக, மூறவேயப்பிரேகச் சத்துமுறவதே 763

உறவானவெண்கலத் துறுகின்றசத்துரு, கறவா நிமிளை காலாரசத்து, மறவாகுந்தொட்டி வணங்காத வண்டத்தோல், குறவானகெந்தி குமட்டும்வெடியுப்பே.

ஒப்பாய்ப்பதினொரு லோகமாயான் சொன்னேன், தப்பாமற்பார்த்தாற் சதகோடிவேதையா, மைப்பால் மறந்தாலு மாட்டமறந்தாலு மப்பாலிதுவொன்றுக் காகாதுபாருமே. 765

பாருமனந்தப்பிற் பகுந்திடுங்காலத்திற், சேரும்பவிச்சென்று செப்புப்போலாகிடுந், தாருகருப்போடுந் தவளமாகும், நேரும்படிகப்பு நிமிஷத்தில்வாய்குமே

வாய்க்குங்கருநாகம்வற்றுதமின்னலா, ஏய்க்கவோவாதியை யிருக்காதுவுப்புக்கு, தாக்குமேசேரிற் றனிப்பிலவேறுது, காய்க்குங்காலத்திற் கறுத்துப்புகையுமே.

கறுத்திடுட்லோகத்திற்கவளித்துப்புத்தாகு, மறுத
திடுமீயத்தில்மாண்டுரோமவர்ளம் நிறுத்திடுவாதத்தை
நிமிஷத்திற்பொய்யாகு, மறுத்திடுங்கம்புக்கு மாகாத
கட்டுக்கே. 768

துரிசிக்குமித்திரம்.

துரிசுக்குமித்திரஞ் சூட்டிறுரென்னந்தி, கரிசித்த
சாரங் காரங்களவீரம், பரிசத்திநிறக்கெந்தி பாங்காஞ்
சிலைபூரந், தரிசிநிமிளை றணித்தத்தாரமிடே. 769

தாரமுடனே தயங்காக்கெவுரியு, மாரமுடலிங்கமோ
திப்பரிநாகஞ் சேரயிவையெல்லாஞ் செயமாந்துரிசிக்கு
நேரேயொவ்வொன்று நிலைக்குங்குருவாமே. 770

துரிசுசத்துரு.

ஆமேயிணங்களப்பிரேகநற்சூடன், போமேபடிகி
புகழ் வெள்ளைகல்லுப்பு, தாமேநற்றொட்டி சவுட்டுப்பு
வஞ்சனம், வாமேயிந்துப்பு வாளன்னபேதியே. 771

பேதியாங்காந்தம் பிலத்தவண்டஞ்சிங்கி, ஆதி
யாம்வங்க மடங்காக்கடல்நுரை, வாதிகாள்பாருங்கள்
மயங்காமலிம்முறை, சாதியாமட்சை துரிசிக்குச்
சத்துரே. 772

சாரமிணங்கள்கேள் சாற்றிறுரென்னந்தி, காரமி
ணைங்கள் கடுஞ்சிலைகெந்தகம், தாரமுடன்வீரந் தளி
லிங்கங்காரீயம், பாரச்சிலாசத்து பகிர்ந்தகெவுரியே.

பகர்ந்திநாகம் பரிசெம்புமனவத்த மகிழ்ந்தநி
மிளை மகாராசவமனசூதம், பொருந்திடுசாரத்திற் பூட்
டக்குருவாகுமிகுந்திடுஞ்சாரத்தில் வேண்டியமித்துரே.

வேண்டும்படிகி வெண்கண்டரிந்துப்பு, யாண்டும்
விரும்பதிலவங்கங் காந்தமும், நீண்டகிளிஞ்சி நிலைச்
சகாநன்டொடு, பூண்ட கடல்நுரை பொல்லாது வண்
டமே. 775

பொல்லாதவப்பிரேகம் பொருந்துங்கடல்நுரை
கல்லாஞ்சவிடுகடு நாகவண்டுடன், மெல்லாவகையெல்

லாமேந்திடச்சாரத்திற், கொல்லுங்கொடிதான கூறிய சத்துரே. 776

வெடியுப்புமித்துரு விளம்பினரென்னந்தி, படிகியுடனே பகுந்திந்தகல்லுப்பு, வடியுநற்காரமதி லிங்கம் வீரமுங், கொடியநல்வால்தேவி கொடிதானதுத்தமே.

துத்தமுடனேசூழ் நாககெந்தக, மத்துங்கடல் நுரை வழங்குநிமிளையு, மொத்தேயிதிற்கூட்ட வுயர்ந்த குருவாகும், கொத்தானல்லுப்பிலே கொடிதான வேதையே. 778

வேதையாமுப்பிலே விளங்கியசத்துரு, வாதைச் சவுடு வதிகாரிகூடலும், போதயவங்கம் புகழுமிரும் போடு, நீதத்துரிசி நிலைச்செம்புவெள்ளியே. 779

வெள்ளியுடன் காந்தம் விளங்கிய மனவத்தம், கள்ளிமூலைகெந்தி கடுந்தொட்டி சிங்கியும், கொள்ளி மூருக்கு கொடுஞ்சாரை யண்டத்தோல், பள்ளியிணங் கற்குப்பாரிடசத்துரே. 780

கல்லுப்புமித்துரு காட்டினரென்னந்தி, மல்லுற் றிரும்புவளர் செம்புபூரமும், பல்லுற்ற நாகம் பருந் துத்தப்பலகரை, மெல்லுற்றகெந்திவிளங்குநிமிளையே.

விளங்குமால்தேவி வெளிவெள்ளையப்பிரேக, மள ங்கிய வங்கமடங் காதலிங்கந்தான், தளங்கியிவையெல் லாந் தாக்கிடவுப்பிலே, வளங்கிய வேதைமட்டற்ற வுப்பிதே. 782

உப்புக்குச்சத்துரு வுரைத்த முறைகேளு, வப்புச் சவுடுவில்லை ரசவர்த்தம், செப்பும்படிகி செயகாந்தங் கடல்நுரை, உப்பினல் வேதை விளம்பவரிதென்னே.

அரிதானகாரத்தினுகாதசத்துரு, பிரிதாம்புளியன் டம்பிலத்த சிலாசத்து, மரிதான சூடன் மகாபூரசன் னமு, மரிதாமிது நாலில் மகத்தானகாரமே. 784

காரத்தின்மித்துரு கடியவுபரசம், காரத்தின் மித் துரு கனகூதம் பாஷாணம், காரத்தின் மித்துரு கன மான சவ்வீரம், காரத்தின்மித்துரு காணீர்சகலமே.

காணீர் நற்சீனத்திற்கண்டிடு முன்னூறும், பேணீ ரூபரசம்பிலத்துரு பாஷாணம், ஊணீரே யெல்லா மூற வானமித்துரு, வாளீர்தான் சொல்லவகுத்தனர் நந் தியே. 786

நந்தியுரைத்த நலமாஞ் சாக்காறுஞ், சந்தேகந் திரச் சத்துவலக்கொன்று, பந்தியமித்துரு பாவியதிற் கூட்டி, முந்திநற் சூதத்தை மூட்டியிதிற்கூட்டே. 787

கூட்டுமுறை கூட்டக்கூலிக் குருவாகும், கூட்டு முறை கூட்டக் கொடிக்குரு செந்தூரங் கூட்டுமுறை கூட்டக்கொடிக்குத் தாங்கிரீவணம், கூட்டுமுறை கண் டால் கொடுபோங்கவனமே. 788

கவனமொன்றல்ல காயமகாசித்தி, புவனத்தினை விட்டாற் பூணையது செந்தூர, மவுனத்தொடு வித்தை மற்றோர்க்குச் சொல்லாதே, சிவனுற்றிருந்த செடாதார மாறுமே. 789

ஆறுசாரக்காலே யண்டம் பொடியாகும், ஆறுசாரக் காலேயண்டஞ்செந்தூரமாம் ஆறுசாரக்காலே யண்டம் பழுத்தோடும் ஆறுசாரக்காலே யமர்ந்தது வண்டமே.

அமர்ந்தமுறைகேட்க அருள்செய்தாரென்னந்தி, சிமர்ந்த சடாதாரத் திருமேனிபஞ்சுரு, வமர்ந்துமே காட்டின மத்தாரவர்மானங், கமர்ந்தபுடஞ் செய்து காணீர் செந்தூரமே. 791

செந்தூரத்தோடஞ்சு செப்புமுறைகேட்க, கந்தூர சாரகாரம தெட்டினம், பைந்தூரும் பாசம்பாயும் வெகு தூர, மந்தாருஞ்சூதமது காணும்வர்ணமே. 792

வர்ணமாஞ் செந்தூரம் வைக்குமுறைகெந்தி, தர்ம மாய்ப்புக்குந் தாக்கித்துத்தாய்கூட்டி, லின்னமீதஞ்சு மீசனுருவாச்சு, தன்னையயங்கண்டாற் சதாசிவனுவனே

ஆகவெண்ணாயிரமதனிலேயாயிரம், வாகாய்மூவாயி ரம் வளயாமீதாயிரம், பாகமறிந்து பார்க்கின்ற யோகி கள், சாகாரென்னூறுஞ் சதகோடிவேதையே. 794

வேதை பிறந்தது விளங்குந்துரிசியில், வேதைபிற ந்தது மெய்யான விந்துவில், வேதைபிறந்தது விளங் கிய நாதத்தில், வேதைக்கிதைவிட்டால் வேறில்லை யண்ணலே. 795

அண்ணலிருப்பதவளுட நாதத்தில் - பெண்ணி னல்லாளும் பேராகும் விந்துவில் - நண்ணுயிதுரண்டு மிசைந்து குருவாகப் - புண்ணியவாளராம் பேரறி வாளரே. 796

அறியாவிளந்தைப் பருவத்துப் பெண்ணிற்கு - பிறியாதலைத்துரு பேரான நாதங்காண் - அறிவான வாலைப்பிராயத்து மன்னவன்-பொறிவாகக் கூடிப்புணர் ச்சித்த விந்துவே. 797

விந்துவு நாதமும் வெருவுந்துறை யெல்லாஞ்- சந்தேகமில்லை தப்பாதுவேதைதா-னந்தயவிந்துவனு காட்டாலொன்றில்லை-பந்தியநந்திபகர்ந்தனராசையே.

ஆசை நீரோடே யன்னீருங்கூட்டி - ஊசிநீரோடு வொருசமனுக்கி - வீசுவான்காரிவிற்பன்ன வேந்தன் - ஆசைநீரோடே யதுகலந்துதானே. 799

கலந்தங்கிறுவதற் காரீயங்கூட்டிச், சலந்தான் கலந்து தனிச்சிவன்மேற்றப்ப, வலந்தானன்றுகந் தான்வன்றுகம்பட்டிடி, வுலந்தாலுட னீரோடி நின் ருவனே. 800

நின்ருன்மூகமெல்லாம் நீராய்க்கடிந்தது, உன்ரு னுதிரமொக்கத் திராவண்ணன், குன்ருனகுருபரன் கூறும்வகைகேட்க, உண்டாகுவாழை யுரைக்கலுஞ் சோதியே. 801

சோதியில்வல்லி சுடலையிநீரும், போதிசேர்புந்தி பொருந்தியநீரு, மாதிச்சமமந்தனன் னீருமவ்வச, மோதியநீரு மொருவர்தன்னீருமே. 802

ஒருவாதமன்னீரு மோர்வளியவ்வசம், பருகிடப் பாண்டியர் பலதீர்த்தம்பாலிக்கும், உருவெனத்தங்களி

லொவ்வசமந்தரம், ஒருவனொருத்தியுடன் பிறந்தார் களே. 803

பிறந்தயிருவரும் பேதைமைநீக்கி, இறந்தாரேவீ ரரேகியுமூழ்கியுஞ், சிறந்தாரிருவருஞ் சேர்ந்து மரு விடில், திறந்தானவன்னி நீராய்ச்செனித்ததே. 804

நீராய்ச்செனித்த நேரியைதன்னில், ஓராளியானை யுடக்கச்சகற்றி, நேராயிருவரும் நேர்ந்துகலந்தபின், போராடவங்கே புரண்டுபொடியாமே. 805

பொடியாலொருவனும் பூவையுஞ்சேர்சமன், படியா ளிருவரும் பாஞ்சாளபாவியுங், குடியாலனைவருங்கூடிக் குழைந்திடப், பிடியாச்சயிலம்பிறந்தான்பிறவியே. 806

சயிலத்தரையைச்சாற்றப்பகிரண்டம், பயிலொத்து நின்று பணவேதியாய்விடும், வயிரம்பிறந்திடும் வச்சிர பேதியாம், சயிலஞ்சவ்வீர மவ்விடைசார்ந்திடே. 807

சார்ந்தசகியும் சமர்த்தாம்புருடனும், வார்த்தநல் மங்கையும் வான்வீரஞ்சூதமும், பார்த்தசமைந்தபடி லிங்கம்பாம்பினில், சேர்ந்திடுநாலு தீபமுமாகுமே.

தீபபேதிக்கிணைபேதிதாம்பிரம், நாகபேதிரசபேதி நாகமாங்காயபேதி கனபேதிகாரணந், தோகைபேதி யைச் சொல்லவொண்ணாதே. 809

சொல்லாதவான் பொருள்சுருதிமுடிந்திட, வெல் லாருங்காண வெடுத்தேயுரைப்பவர், பொல்லாப்பிறவி பிறந்தேபுலையாய், எல்லாநரகிற்குங் கீழாய்க்கிடப்பரே.

ஆரியன்படைப்பிலைவருங்கூடியே, காரியைத்தே றிக் கலந்தேறிக்காட்டாய், ஆரியசூரியன் முகமாய்ச் சூழ்ந்தேரேறி, வீரியனையும் வெட்டினன்கட்டியே.

கட்டிச்செயநீராற்காரமுஞ்சாரமு மெட்டியபாம்பு மிருவகைபாசியு, மொட்டியநாதமுய நீரில்மர்த்தனங், கட்டினன்வீரன் கனல்வாட்டமாண்டதே. 812

வாட்டியெழுவகை வளமாகவைத்தபின், ஊட்டிய மூசுத்தை, யுள்ளுறவைத்தபின், மூட்டிச்சரிநிமினை

மூகிர்ந்தனல்மேலே, காட்டியகற்பங் கனமாரி சொர்ணமே. 813

வாரிச்சமிளாய்வான் வீரர்தன்மேலே, காரியபோ திந்து கணைக்குத்துகையொன்றாய், மூரிச்சமன முச்சுடர் மூட்டியே, எரிக்குளிகையி லிருந்துதெளிந்ததே. 814

தெளிந்தேகுளிகையாஞ் செகமெல்லாம்வேதிக்கும் அளிந்தநவலோக மதுபடப்பொன்றாகும், களிந்தே சடம்போய்க் காயமகாசித்தி, பிளிந்தேயெண்ணாயிரம் பேராயுரைத்ததே. 815

உரையீரின்னீரி லுயிருடனென்றாய், அரையீர்நல் வேந்தனே யவ்விடைகோசமும், புரையேறுமாயனைப் போந்தநற்பீசமும், வரையீர்கொம்பின் வசனமதென் றாரே. 816

என்றாரேயாதிக் குருவாந்தரிசியார், வென்றானே வாளால் வெட்டினன்சேனையை, தண்டாமரையால்சக லமுங்கட்டுண்ணுப, வண்டானதும்பை வான்வாசிக்கு மாட்டே. 817

கோசபீசம்.

ஆடுஞ்சரக்கு வதுபத்துநாலுக்குங், கூடுஞ்சரக்கு கோசமும்பீசமுங், கூடுஞ்சரக்கின் குன்றிகுணங்கண் டால், வீடும்விளக்கும் வேந்தனுமாவனே. 818

ஆதியகோச மதுகாண்மகாசாரம், பாகியபீசம் பரி யென்றறிந்திடு, ஏகியிதுரண்டா லெடுத்தகுருமுறை வேகியவெண்கண்டர் வீரமுங்கூட்டிடே. 819

கூட்டுமுறைதான் குலாவிப்பரிமேலே, மூட்டிடுகு தத்தை மூந்திடவிந்துவால், ஆட்டிடுகெண்டரு மடவா னவீரமும், பூட்டுவதுமேலே போடுபுட மொன்றே.

ஒன்றாய்ப் புடத்திலுறுதி வெண்ணீறாகும், நன்றா மிரத்துக்கிதுகாண் தலைகுரு, பன்றானகுதம் படுமுன் னேகட்டுண்ணும், வன்றானுரைத்தான் வகாரமிது மூன்றே. 821

வகாரவழியிலே வாதமுறைகேளு,விகாரதனிநீரில் விளங்கிடக்கட்டி, அகாரமுதலா யறுபத்துநாலுஞ்சா, மகாரமகாவித்தை வசமாகும் பாருமே. 822

பாரும்வசியம் பகுந்தகெவனமுஞ், சேருங்குரு வொன்று திசையானசூதத்தில், வேரும்நவ்விந்து வில் விட்டரை கட்டுண்ணுந், தாருநவ தொந்தத் தனிச் சூதமேறுமே. 823

தொந்தமுறை கேட்கச் சூட்டிடுறென்னந்தி, பந்தித்த சூதத்தைப் பாச்சதிற்கொன்று, வந்திக்கவந்திக்க வளவற்றசூதஞ்சாஞ், சிந்திக்க வனமுஞ்சேரும் வசியமே. 824

வேண்காரக் கட்டு

சேரும்வயத்தம்பஞ் செப்புமுறைகேளு,சோருநற் சூதமுந் துலங்குநற்றங்கமும், நேருநற்கெந்தியும்நிலை யவுறவாக்கிப், பாருநற்செந்தூரம் பாங்காக வுண்டிடே.

உண்டிடு குன்றியிடைதானற்பாலிலே, கொண்டிடு கற்பமாய்க் குலாவிய மண்டலந், தண்டிடுகாயந் தனிச் சட்டைமேலேகு, மொண்டிடுந் தேகமொரு கோடி சித்தியே. 826

கண்டேனே சித்தியைக் காரணர் காட்டிட, உண் டேநற்றேசிக னுணர்ந்தேயுரைத்தது, விண்டேன் பில ன்பேசேன் வீறுகள்செய்திலேன், நண்டே நமக்குநாட் டினூர் நந்தியே. 827

நாட்டியவெள்ளைத் துரிசியும்வீரமும், நீட்டிச்சம னாய் நிறுத்தரைவிநாவில், ஓட்டியகார மொருபத்திலே பூசி, காட்டிடுவெய்யலிற் காரமுங்கட்டுமே. 828

சாரக்கட்டு.

கட்டியகாரங் கண்டறிவெள்ளையும், ஒட்டிச்சமன் கூட்டி யுரத்தரைவில்லைசெய், மட்டியசாரமேல் வளயா யிதைப்பூசி, தெட்டும்வெட்டியுப்பு சினமுங்கல்லுப்பே.

உப்பொடுமூன்று முறவரைநாதத்தில், தப்பாமற் பூசிக் கனல்மேலேவாட்டிடு, ஒப்பாகஊசர மண்ணுக் குளேவைத்து அப்பாலகுவா யிணைத்துப்புடமிடே.

வெடியுப்புக்கட்டு.

புடமிட்டெடுக்கவே பேரானகாரஞ்சா, மடமிட்ட சாரமதுக்கிடைகண்டரும், திடமிட்டவிந்துவாற் சேர்த்தேயரைத்திதைத், தடமிட்டிணங்கன் மேற்றப்பியுலர்த்திடே. 831

தப்பியசீனமுந் தன்னிடைகல்லுப்பு, ஒப்பியரைத்திடு வுறவானநாகத்தில், அப்பியிணங்கன்மே லன்பாகப்பூசிட்டு, கப்பிக்கனல்காட்டக் கட்டும்வெடியுப்பே.

படிகாரக்கட்டு.

வெடியுப்பினோடே வெள்ளைத்துரிசியு, மடியச்சமன்கூட்டி யரைத்திடுசுக்கிலம், படிகமேற்பூசிப்பாங்காயுலர்த்திடி னெடிதின்ரவியில் நீட்டியுலர்த்திடே. 833

உலர்ந்தபடிகியுற வாயதிற்சாகுங், குலர்ந்ததுரிசியிற், கூட்டுசமன்சீன, மலர்ந்திடுவிந்துவா லரைத்தகல்லுப்பால், நலர்ந்தேயிதுபுடம்நலக்கூட்டங்கலலுப்பே

சூடன்கட்டு.

கட்டியவுப்பையுங் காண்டர்வெளுப்பையும், ஒட்டிச்சமனு யுறவரைவில்லைதான், தட்டியசூடனிற் றப்பியனல்வாட்ட, முட்டியசூடன் முழுக்கட்டாம்பாருமே.

பூரக்கட்டு.

பாருமேசூடனும் பாங்காந்துரிசியும், நேருஞ்சமன்கூட்டி நெகவரைவில்லைசெய், தாருமேபூரத்திற் றப்பியுலர்த்திட, ஆருமேபூரம்மளியாய்க்கட்டுமே. 836

வீரக்கட்டு.

அமளியாய்ப்பூரமு மவ்விடைகண்டருங், கமளித்துவிந்துவாற் கடுகவரைத்திடு, விமளித்தவீரற்கு மேற்பூசிவாட்டிட, வமளித்துவீர மணிபோலுருகுமே. 837

உருகியவீரத்தோ டொன்பதுகூட்டிடில், சொருகிடும்வேதையைச் சொல்லத்தொலையாது, பருகிடுஞ்செந்தூரம் பாராய்குருபற்பங் குருகிடமண்ணுங் களங்கமுங்கோடியே. 838

நாகசெயநீர்.

கொடிதான நாகத்திற் கூட்டியரைசூத, மடிவாயு ருக்கிவை யைந்திடைவீரம், பொடியாகச்செய்து போட்டுவைகல்வத்தில், வடிவாய்ச்செயநீர் போலாகுங் காணுகமே. 839

நாகச்செயநீர்க்கு நாட்டக்குருகேளு, வாகநிமிளை வழங்குங்கருநாகம் போகாதவீரம் புகழ்மூன்றுசேர் சமன் ஏகவிதுக்கிடை யெடுத்திடுந்தங்கமே. 840

தங்கசெந்தூரம்.

தங்கமூருக்கையிற் ருக்குமிதுமூன்றும் பொங்கியெடுத்துப் புகழப்பொடியாக்கில், அங்கியதங்கக் குழிகாணுமம்மம்மா, எங்குமிதுபடி யிதுதான்செந்தூரமே.

காரசெந்தூரம்.

செந்தூரஞ்செய்யத் திறஞ்சொன்னேரென்னந்தி, பந்திமூன்காரமேற் பாவிக்குருபூசி மூந்திய நாகநீர் மூழுகத்துவைத்திட்டு தந்தூரக்கட்டி தனித்தீயம்வாட்டிடே. 842

வாட்டிடவாட்டிட வளமாய்ச்சிவப்பேறும் வாட்டிடவருணநிறமாகு மூட்டிடச்செந்தூரமூவாயிரம்லோகத்தில் நீட்டிடநீட்டிட நிரை நாற்றுக்கொன்றிடே.

வீரசெந்தூரம்.

இப்படிவாட்டு யிதமாய்வெடியுப்பு அப்படிதானே யருணனிறமாகுந் தப்படிகாரீயந் தானூற்றுக்கொன்றிடு அப்பிடுவேதையரைக்குந் திசைமாற்றே. 844

வெடியுப்பு-செந்தூரம்.

திசையானகல்லுப்பு சேர்ந்தபடிவாட்டத், தசையான்மேனி காசாம்பூப்போலாகும், விசையாம்நவலோக மிடுமூன்னேபத்தரை அசையாதுவொன்றுக்கு மம்மாசெயமிதே. 845

கல்லுப்பு.

செயமாந்துரிசிக்குச்செய்திப்படிவாட்ட, மயமான வர்ணம் வளர்ந்துசிவப்பேறும், நயமாம்நவலோகம் நாட்டுமுன்பத்தரை பயமேதுமில்லை பரிசனவேதையே

துருசு.

பரிசித்துச்சீனத்திற் பதருமல்வாட்டிடில் வரிசிக்கு மெங்கும் வளமாய்ச்சிவப்பேறுந், தெரிசிக்குமுன்போலத் திசைமாற்றுத்தப்பாது விரிசித்துவாட்டிட விதமாஞ்செந்தூரமே. 847

சீனம்.

காணீர்செந்தூரங் காட்டாயிரத்தொன்று, பூணீர் நவலோகம் புகழ்மாற்றுப்பணிரண்டு ஆணியுமில்லை யடங்காமகாவேதை வாணிபநந்திவகுத்தமுறைபாடே.

சூடன்—பூரம்—தங்கம்-செந்தூரம்.

முறையானசூடனில் மூட்டிடுவிப்படி முறையான வெட்டுக்கு மூட்டிவா தங்கத்தை முறையாஞ்சரக்குகள் முன்னிற்கமாட்டாது முறையாய்ச்செந்தூரிக்கு முன் சொன்ன சித்திக்கே. 849

வீரசெந்தூரம்

சித்திக்கும்வீரத்தைச் செந்தூரஞ் செய்யக்கேள் முத்திக்குமுன்னென்று தங்கமுடன்சேரஒத்தித்துருக்க வுருகியேயாடையிற் பத்தித்தநாதத்தைப் பாச்சைத்திடைதானே. 850

இடையாகக்கெந்தியு மிதிற்பாதியோசிலை உடையாமனிதனை யொக்கப்பொடிசெய்து குடையாமயக்குப் பிகுமூறவடைத்திடு உடையாவடுப்பேற்றி யுணரவெரித்திடே. 851

எரித்திடச்செந்தூர மிதுவுமகாவேதை அரிந்த நவலோக மையாயிரத்தொன்று பொருத்தியேதாக்கப் பொன்னுக்குப்பொன்னது மருத்தியமாற்று வழங்குமிருபதே. 852

வழங்கியவொன்பதும் வரிசையாய்ச்செந்தூரம், மூழங்கியவேதை மூட்டுபகிரண்டம் விளங்கியவிவை யெல்லாம் வெவ்வேறேசெய்வோர்க்கு தளங்கியவாதந் தப்பாதுசொன்னோமே. 853

சொல்லியமூன்றதில் தொந்தங்கள்மூன்றுந்தான், பல்லுயிரண்டம் படைப்பதுமூன்றுந்தான் வெல்லுங் கரணங்கள் மேனியில்மூன்றுந்தான் அல்லும்பகலுமா யரைக்கின்றவாறே. 854

அரையீரின்னீரிலது திறமானதாற் றிரையீர்சிலை மண் செய்ய்க்குறியாகும் வரையீர்மணுப்புரி மேலே புரிந்து கரையீர்கவுதாரி காடைகுக்குடமே. 855

குடமேகுடத்தின் குறைதீர்ந்துகொண்டபின் தட மேவுசஞ்சீவி தானேகுலந்தரு மடமேவுசத்துரு மித் துருவாகும் நடமாடினுனெங்கள் நற்குருநாதனே.

நற்குருபூசை நாயகன்பூசையு மூற்குருபூசை மூனி வர்கள்பூசையும் பொற்குருபூசை போயிருபத்தினல் முற்குருசொன்ன மொழிமுத்திசித்தியே. 857

சாரம்.

சித்தித்ததேசிகன் கடமாயுரைத்தது உற்றுற்றுப் பார்க்க வொளிதருநன்னீரு நத்தித்தசாரமேல் நாயக னைப்பூட்டிப் பத்தித்துவாட்டப் பலம்படும்வாறே. 858

வாறேயிச்சாரமா மணியானது பேறேதுவண்டர் பெரும்புடமேசெய்து நீரோடுசாரம் நிறைசரிமர்த்த னம் வேறேதுமில்லை மெய்ப்பரஞ்சோதியே. 859

சோதிகள் மூவருந் தொழுதேவணங்குவர், வாதி கள் மூவரும் வந்துவணங்குவர், சாதிபதினொன்றுந் தன்பேலே சார்ந்திட, ஆதிகுரு பற்பமானந்தமாகுமே.

சூதக்கட்டு

மஞ்சள் கெவுரிமறுபாசமன்னன் பஞ்சக்கொடி படைசேரிணங்கன் அஞ்சிலைச்சாரமரிதிறநற்சீன மிஞ் சாதிது வுடன்வெள் காந்தங்கூட்டிடே. 86

கூட்டுமெருந்து பதினொன்றிற் குறையாமல் மூட்டு டயிரண்ட மூந்திய நீராலே ஈட்டுங்கடிகை யேழரை யரைத்தபின் காட்டுங்குருவின் கண்காட்சி சொன் னேமே. 862

குருவிற்பணவிடைகூட்டு நூற்சூதத்தில் அருவிய வாய்நீராலேதற்குநிரப்பிட்டு தெருவிய விந்துவுஞ்சேர வதில் வார்த்து மருவியடுப்பேற்றிவளமா யெரித்திடே.

எரித்திடச் சூதமிளகியேவட்டாகு மரித்திடச் சூத மணியாயுருகிடும் பொருத்திடுஞ் சாரணைப்போக்கே யிதுவாகுந் திரித்திடும் வேதை செகமோகனமாமே.

மோகனமாய்க்கட்டு மூயன்ற சரக்கெல்லாம் பாகெ னப் பூசிப்பதரூமல் வாட்டிடச் சாகெனச் சாகுஞ் சத கோடி வேதையாம் வாகன வஸ்துவின்மார்க்க முறை தானே. 865

மெழுகு

மயினமுறை கேட்கவகை சொன்னு ரென்னந்தி யபினிசணம் புவந்திரத்தாமரை கயினிக்கடுக்காய் கலந் திடும் வெள்ளைக்கல் பயினித்த வெல்லாம் பாங்காகச் சேர்த்திடே. 866

பாங்கான கற்சுண்ணம் பகர்ந்திடும் வெண்கரு கோங்கான சேங்கொட்டை கொடிய குங்கிலியந் தேங் காய்ப் பசுங்கஞ்சி தேனின் மெழுகோடு-வாங்காயத ஞேடரைத்த பொடிசெய்பே. 867

செப்புப் பொடியுஞ் சேர்ந்தவுருக்குடன்-வம்பான வங்கம் வளமானகாரீயம்-வெம்பான வெண்கலம் வெவ் வேறு பொடிதான்-கம்பான கள்ளிப்பால் கல்லாலம் பாலிதே. 868

ஆலோடரசு மத்தியும்பேயத்தி-மேலோடிலுப்பை விளங்குஞ் சதுரக்கள்ளி-சேலோடெருக்கு சிறந்த நல் லிச்சியின்-பாலோடிது வெல்லாம் பாரிருபத்தொன்றே.

இருபத்தொன்றீது மிடைகள் சரிகூட்டி-மருவுற்ற பாலை வளமாகக்காச்சிட்டுக் கருவுச்சரக் கெல்லாங்கலந்

கொன்றிற் பொய்துமேயருவைத்து சம்மட்டியதின்மேலே வைத்திடே. 870

அடிக்க வடிக்க வகண்ட மெழுகாகு-மடிக்கவடிக்க மண்ணாடுந்திபோடே-தடிக்கத்தடிக்கச்சலமுள்ளே புக்காது-பிடிக்கப் பிடிக்கப் பிசகாமயினமே. 871

மயினங்கேளின்னம் வைக்கு முறைபாடு-அயினக் கருமண் வறப்பொடி பீங்கான் வெயினிவிளாய்பிசின் விளங்கியகிட்ட மயினத்தவப் பிரேகமடவான மாம்பாலே. 872

பாலொடு தாம்பிரயற்பமும் வெண்கரு சேலொடு வொவ்வொன்று சேர்ப்பாயரைப்பல மாலொடுமாலம் பால் வாறுதிற்காற்படி நாலோ நல்லெண்ணெய் நாட்டைந்து அள்ளியே. 873

அள்ளிதா னைந்து சூட்டடிலோ நடமள்ளிக்கிளறி யனல்காட்டி லச்சடி வள்ளித்தடிக்க வளமாய் மெழுகாகும் கொள்ளிச்சலம்புகாகு லாவுமயினமே. 874

குலாவியே யின்னங்கூறிறுமென்னத்தி யலாவிய வத்திப்பாலதிஸ்போடு வப்பிரகங் குலாவியே யப்படி குலைந்துமயினமாங் கலாவிய வெண்கஞ்ச சங்கமு மத்தியே. 875

மத்திக்கமீ னெட்டிவாகாய்விரல் நீளம் நித்தித்து நீறில் நிரையவே சாச்சிட்டுக் கத்தித்தவைப்பிரேகங் கலநசறனைசம் மொத்தித்து மெள்ள வுறவாய் நருக்கியே.

நருக்க நருக்க நலமாய்மெழுகாகும் பரிக்கில்யயினைத்தான் பார்க்கில் வெகுசொற்பஞ் சொருக்கியபாஷாணத்துதமுங் கட்டுண்ணு மருக்கிய செந்தூரமருணனிறமாமே. 877

வைத்துமேற் சின்னிவளயாய்க்கவிழ்த்திட்டுமெய்த்திடவந்த மெழுகைக்கவசித்து கைத்திடமாகக் கவசி பதனமா யத்தித்தேயச் சோலந் திருவட்டணைவையே.

திருவட்டணைமேல் தீபங்கொளுத்திடு எழுவிட்டசுக்கு ளிலுப்பை நெய்யோவாரு கருவிட்டகாலத்தில்

கலந்துவாய் தண்ணீரை பொருவிட்டிறைத்திறைத் தூறிடு தண்ணீரே. 899

தண்ணியிறைத்துத் தத்தனித்தனி நீர்விட்டு பண்ணிய தீபம் பருமன் விதிகேளு எண்ணியிழைதா னொரு நூறுபொன்றிடு வன்னியசாமந்தான் வைப்பாய்பதி னாறே. 880

பதினறுசாமம் பாங்காகத்தீபஞ்செய் மதினறுமீச னுமாயியும்பூசைசெய் விதியாங்கணபதி விளங்குதிரு வாணி கெதியானவைரவன் கெடியாகப்பூசியே. 881

பூசிக்கப்பூசிக்கப் பொலிவாகுஞ்செந்தூரம் பூசிக் கச்செம்பினுற் புகுங்காண்சலமுள்ளே பூசிக்கறியாட் டால் போட்டதெல்லாம்போகும் பூசிக்கவல்லோர்க்கு புத்தியுமுத்தியே. 882

செந்தூரம்.

இகத்துக்காமியமே மகிக்குஞ்செந்தூர மகத்துச் சிலசரிவைக்குமருந்துகேள் நகத்தினுற்சூதத்தின் நாலு நாலும்பூ பகத்திலிதுரண்டும் பருவிங்கங்கூட்டிடே.

கூட்டிக்கருநாகங் குலாவியிடைரண்டு வூட்டுமனோ சிலை போரிடைதானதில் நீட்டுதெங்கம் நிலையாயிடை பொன்று வாட்டுபதினறு வெல்லாங்கழஞ்சொன்றே.

கழஞ்சுபதினுன்குங் கல்வத்தனிற்போட்டு வழஞ் சியவெண்ணைச் சாறுருடுபொற்றலை கழஞ்சியதாம்பூலச் சாற்றூன்றுமேசாமம் குழஞ்சிடமத்தித்துக் குமுறவு ருட்டிடே. 885

உருட்டியேதெல்லு போலுலர்த்தியது வாங்கி மருட்டியதாலத்தில் வைத்துஅதன்மேலே அருட்டிய கிண்ணிவை யப்புமெழுகுவை பருட்டிச்சலம்வார்த்துப் பாங்காய்விளக்கிடே. 886

விளக்கிட்டெரித்திடு விடாதேநீ மூன்றுநாள் துளக்கியசெந்தூர மருணனிறமாகுங் களக்கியகாரியங் கனமாயிரும்பிலு மிளக்கியேபெண்பதுக் கொன்றி யேமமே. 887

சேந்தூரமிடை.

ஏமம்பிறக்கு மினிமையிருபது வாமயநாகம் வைய இல்ரண்டரை நேமயலிங்கம் நிறைமூன்றேமுக்கால் சேர் கோமயத்தங்கங் குலாவுமிடைரண்டே. 888

இடைதான்கெந்தகமிடுமூன்றேமுக்காலாம் இடை யாமனோசிலை யிடுமூன் றேமுக்காலாம் இடை யான தாளக மிதின்மூன்றே மு க் கா லா ம் இடையானதேது யிசைந்தபணமிடே. 889

பணவிடையெல்லாம் பாச்சியேகல்வத்தில் அணை விடுகத்தன் குதம்பையுஞ்செம்முள்ளி துணைவிடுசாற்றி னூர் சூழரைமூன்று நாள் கணலிடுநெல்லுப்போற்கட்டி யுலர்த்திடே. 890

உலர்த்தியேசில சரிக்குள்ளேயிதுவைத்து மலர்த் திடுமாமுகை மருவிட்டுக்கிண்ணியை கலர்த்தசலம்விட் டுக் கடுகவிளக்கிட்டு பலத்திடுமுக்காலிற் பாங்காகவைத் திடே. 891

வைத்திடுதீபங்கீழ் வளமாகரண்டுநாள் மொய்த் திடுநீரை மூட்டுமூட்டேவாரு எய்த்திடுதீபத்திடு வதி லுப்பைநெய் குய்த்திடுசெந்தூரங் குலாவுமருணனே.

அருணனுஞ்செந்தூர மயலோகம் பொன்னுகுங் கருணனுய் நூற்ருென்று காட்டிடத்தப்பாது வருண மாய்ச்சொர்ன வருஷமாய்பாரிது தருணமாங்காயஞ் சாதிக்கச்சித்தியே. 893

செந்தூரம்

சித்திக்க தங்கஞ்சிறந்தயிடை மூன்று, வெத்தித்த சூதமூட்டிடு நாலிடை, பத்திச்சிலைதான் பாச்சதிலைந் திடை, மத்தித்த லிங்கம் வளமாமிடை யொன்றே.

வளமாய்ப்பதின்மூன்று பணவிடை நேரொக்க, இளமாம்பழச் சாற்றிற் சித்திரமூலவேர், உளமா மிடி த்து வுறக்கப்பிழிந்திட்டு, களமாயரைத்துக் கட்டிடு வில்லையே. 895

வில்லையை வைத்திடு விளங்கிய காலத்தில், மல்லேயே கிண்ணிமயினேமு சந்திடுஞ், சொல்லேயே சுண்டு விறற்போற் றிரிபோட்டு, எல்லேயே போக்கி யியற்றீபம் வைத்திடே. 896

செந்தூரம்

வைத்திடுதீபம் வளமாக மூன்றுநாள், கைத்திடு செந்தூரங்காந்தி யருணனுந், தைத்திடு வெள்ளியிற் ருக்கொன்று ளாளத்திற், பைத்திடு வேதை பத்தரை தப்பாதே. 897

தப்பாயினி ரண்டிற் சாறண்டு நாகத்தை, உப்பாம் பரிரண்டுயர் கெந்திளுலிட்டு, தப்பாம் புளியாரைச்சாற் றரை யெண்சாமங், கைப்பானதை வேளேச்சாற்றி லரைத்திடே. 898

அரைத்ததை வில்லேபோ லடையா யுலர்த்திடு, விரைத்ததைக் காலத்தில் மெழுகொடு கிண்ணிவை, தரைத்துச்சலம் வார்த்துத்தான் கீழ்விளக்குவை, பரத்திியே கிண்ணிமேற் பாச்சிடு கிண்ணியே. 899

நெல்லுப் பொரிந்தால் நிலேக்குஞ்செந்தூரமாம், பல்லுற்றலோகத்தில் பாச்சதை நூற்றொன்று, நல்லுற்றமாற்றும் நயமிதுதப்பாது மல்லும்வறுமையு மாண்டிடும் பாருமே, 900

அயநாகச்சேந்துரம்.

பாருமயநாகம்பரவியுருகையில், நேருமதில் நாகம் நீட்டிடநீட்டிட, ஒருருமூன்றுக்குநாலுண்டுகண்ணுந், தாருமே சேரந்தலேசுத்தி மாளுமே. 901

மாளும் நல்நாகம்வைத்திடுகாற்பல, மாளுநல்சூதமதிலிடுகாற்பலம், தேளுநற்கெந்தியுஞ் சேர்த்திடரைப்பல, தாளுற்றுய்தான் தனியரைக் காலென்ன. 902

அரைக்கவிது வெல்லாமழகான தாம்பூலம், வரைக்கியேகி வில்லையாம் வைத்திடு தாலத்திற், றரைக்கிய கிண்ணியின் சந்தில் மெழுகிட்டு உரைக்கத்தின மூன்றுறப்பாடு திபமே. 903

தீபந் தினமூன்று தெவிட்டா தெரிந்தபின், பாவம் பதினெண்காதம் பறக்குஞ் செந்தூரமாம், கோப நவலோகங் கொடுவாயிரத்தொன்று தாபந்தணியுந் தரித்திரம் போகுமே. 904

போகுஞ் சிலசரிபோக்குந் துறைக்கெல்லாம், வாகுங்குருவொன்று வைக்குமுறை தானுந், தாகுங் கிளிஞ்சி தாம்விட்டு வாங்குநீர், ஆகும்படி யொன்று வமரவெடுத்திடே. 905

எடுத்தநீர் தேங்காய்க் குடுக்கையினில் வார்த்து, மடுத்தமருந்து வெண்சீனங் கல்லுப்பு, வெடிக்கியகாரம் வெடியுப்பு வெண்கண்டர், அடுக்கியசார மதனோடு வீரமே. 906

வீரமோடேழும்வெவ்வேறுபலங்காலாய், பாரமாம் பூரம் பாச்சோர்விராகன்றான், தேரவெல்லாம் தெளிவாய்க்கல்வத்திட்டு, நேரவே யொன்றாய் நிமிரப்பொடி செய்யே. 907

அரிசி சிலசாரி

பொடிசெய்து வெல்லாம்போடு சலத்திலே, படிசெய்து கையாலே மத்தித்துவா இனம், கடிசிது காலையுமாலையுந் தப்பாதே பொடிசெய்தமாத மொன்றிற் குழம்பாமே. 908

குளம்ப வடித்துக்கொட்டிடு பீங்கானில், வளம் பொருநாகம் விந்துவதில்வாரு, தளம்பெற வார்த்துத் துளித்தபதம் பார்த்து வளம்பெற வெல்ல மரிசிபோற் பண்ணிடே. 909

பண்ணுமரிசிபச்சை யெல்லாங்கொல்லும், பண்ணுமரிசி பரிசத்தினிற்சாகும், பண்ணுமரிசியிற் பார்த்திடு செந்தூரம், பண்ணுமரிசிதான் பாரிற்குருவிதே.

பாரிற்சில சரிபாச்சு துறைக்கெல்லா, மோரோரரிசி யுறவிட்டுச் செந்தூரத், தாரீர் நல்வேதை தப்பாது சித்தியாங், காரீது விட்டாற் கடுகுப்பதமாமே.

## பஞ்சபூத சரக்கு

பதங்கமே தாமறபயமத் துச்சத்தாகக், கெதங்கிய தாளகங் கெந்தி மனோசிலை, நிதங்குங்கெவுரி நெடு வெள்ளையுத்த, மதங்காமட்சத்து- துறைக்கெல்லாங் கூட்டிடே. 912

கூட்டுவை தேதென்னுகுருடரே போங்காதிர், நீட்டிய வங்கங் கேள் நிலைக்கவரிசியை, போட்டுவா வெல்லாச் செயநீர்க்குமரிசியை, போட்டவுடன் சரக்கெல்லாம் பசும்பொன்னே. 914

## பஞ்ச அண்டம்

பொன்னுக்கோரண்டம் பூசைக்கு வோரண்டம், பண்ணிப்பகுந்து பராபரைதந்தனன், பொன்னுக்குத் தந்தை போக்கறியாமலே, தின்னுற்றுச் சுட்டுதிகைத் திருந்தார்களே. 914

திசையாதேமாண்பர் திரண்ட முறைகேளு, வகையாங் கெருடன் மயிலுடன் செய்போத்து, வகையான தாரா தனிக்காக்கையோ டைந்து, பகையாய்ப்பறப் பினம் பாரிதுவண்டமே. 915

அண்ட மிறைஞ்சுமளவில்லைவேதைதான், கண்ட நவகண்டங் காசினியோர் மெய்ச்சுந் தண்டிக்கடாமுஞ் சகலமும் வேதிக்கும், எண்டிசையோர்புக ழென்குரு சொன்னதே. 916

குருவா முறைதன்னைக் கூறினரென்னந்தி, அருவாம் பிரிதிவி யதன்கிருதாளக, மருவாஞ் சலக்கூறு மண்ணுங்கடல்நுரை, கருவாங்கனற் கூறுகண்டீர் நற் கெந்தியே. 917

## தயிலம்

கெந்தித்தவாயுவின் கூறுகுமேகாந்தம், பந்தித்த வான்கூறு பாராப்பமகாருதம், அந்தித்த வைந்துமறைக்க முறைகேளு, மொந்தித்த மண்ணுஞ்சலமு மொன் றாய்விடே. 918

விட்டரை தியும் விளங்கியவாயுவு, மொட்டியநாவி லுறப்போடு வாகாசங், கொட்டவரைத்துக்கு மட்டு ரவிக்கிண்ணி, திட்டந் தினமொன்று செல்கதிர்வைத் திடே. 919

வைத்திட வெல்லா மண்டியுறவாகும், பைத்திடு வண்டம் பணம்போற் பொதிந்திடுங், கொத்திடு வெள் ளைத் துரிசியும் வீரமும், தைத்து நீ அண்டச்சாம்ப லும் போட்டிடே. 920

போட்டிடு வந்தந்தவண்டந்துச் சாம்பலு மூட் டிடு வெண்கரு மூறிந்து சலமாகு, மாட்டிடு வைந்து குருவினிதைவார்த்து, ஓட்டிடு நாதமும் விந்துமுறை வாறே. 921

வார்த்தேயிதற்குள்ளே மாட்டொன்று வீரத்தை, வார்த்தே யிதற்குள்ளே வாட்டொன்று வெண்கண்டர், வார்த்தே யிவையெல்லாம் வாகாயுலர்த்திடு, வார்த்தே யிதுவேமூ மகாகுரு பாருமே. 922

பாருமே யிந்தக்குருதான் திசாண்டத்திற், குருமே யண்டந்தான் போட்டதி னுள்ளே, வாருமே சத்துரு வளமானயிக்குரு, நேருமேயொன்றுய் நிறைந்தயிலமே.

தயில நவலோகந் தடவப்பசும் பொன்னுந், தயி லமு பாசந்தாக்கப் பசும்பொன்னுந், தயிலம்பரிசிக்கச் சகலமுங் கட்டுண்ணுந், தயிலத்தின் வேதை சதகோடி சித்தியே. 924

பூநாகச் சத்திலேபூட்டிடு நாகத்தை, பூநாகச்சத் திலே பூட்டிடு வங்கத்தை, பூநாகச்சத்திலே பூட்டிடு கருநாகம், பூநாகச் சத்திலே பூட்டாய் வயிரமே. 925

வயிரத்தை யுண்டது யாள் புடம்ரண்டிலே, துய ரற்று நின்றுசுழன்று வெண்ணீருகும், பயிரிற்று வாத த்திற் பாராய் மகாகுரு, கயிரற்ற சூதத்தைக் காட்டுமுன் கொல்லுமே. 926

கொல்லிடுசூதத்தைக் கொடுநாறு தொந்தனே, வெல்லிடு மெல்லாம் விளங்குமகாகுரு, செல்லுமே திக்

கெல்லாஞ் சேர்க்கக் கெவனமா, மல்லுமேகாயமாளா தொருநாளே. 927

மாளாத பூநாகம் வளமாயுருக்கையிற், கேளாயிரும் பிடு கெடியான காந்தஞ்சேர், தேளான செம்பிடு செய்ய விரண்டிடை, ஆளான சூதஞ்சேர்த்தடவாய்ப் பொடி பண்ணே. 928

பொடியா மிடைக்கிடை பூட்டிடு கெந்தியை, பொடியாமிடை பாதிபூட்டு மனோசிலை, பொடியான தெல்லாம் பூட்டுவயக்குப்பி, பொடியாமடுப் பேற்றப் புகழுஞ் செந்தூரமே. 929

புகழும் பூரச்செம்பிலே தங்கஞ்சேர், புகழும் பூரச் செம்பிலே கருநாகம், புகழும் பூரச்செம்பிலே 'நாகஞ் சேர், புகழும்பூரச் செம்பிலயமிடே. 930

இட்டே யிதனோடியலான சூதஞ்சேர், பட்டான கெந்தகம் பரிவாகப்பாச்சிடு, கொட்டினதாய் சேர்குமட் டியயக்குப்பி, மட்டாயெரிக்கவளமாஞ் செந்தூரமே.

வளமான சங்கிலே மாட்டுகருநாகம் வளமானசங் கிலே மாட்டிடு தாம்பரம்-வளமான சங்கிலே மாட்டிடு நாகத்தை, வளமானசங்கிலே மாட்டாய் நற்காந்தமே.

சேர்த்திடுமயில் துத்தஞ்சிந்திடு செம்பிலே, சேர்த் திட்டிரும்பைத்திறமான நாகத்தை-சேர்த்திடு காரீயஞ் சிறந்தபசும் பொன்னே, சேர்த்திடிநிற்சமன் சேரநிற் சூதமே. 933

சூதமுபாசஞ் சூட்டுதுறைக் கெல்லாஞ்-சூதமுங் கெந்தியுஞ் சூட்டுதுறைக்கெல்லாம், சூதமுந்தாம்பரஞ் சூட்டுதுறைக் கெல்லாம், சூதமுந்தங்கமுஞ் சுகமாகச் சூட்டிடே. 934

சூட்டிடு வொவ்வொன்ருய்ச் சுகமாயுபாசஞ், சூட் டிடு சூதமுந் துலங்கிய கெந்தியுஞ்-சூட்டிடுந்தாரமும் துறை முறைதப்பாதே, சூட்டிடுவேதையாஞ் சொன்ன ரென்னந்தியே. 935

வேறு

நாகபினியும் நலமானகெந்தியும்-வீரமு நாட்டிடு தாளக நாகமும், வீரமு நாட்டுமனோசிலை நாகமும்-வீரவங்கமு நாட்டிய கெவுரியே. 936

வங்கம் லிங்கம் வகையாமனோசிலை, வங்கமிரும்பு வளர்சூதங் கெந்தகம், வங்குஞ் செந்தூரமடலா யரிதாரம்-வங்கமுந் துத்தமும் வகையானவீரமே. 937

இரும்புக்கு லிங்கமிசைந்த மனோசிலை, இரும்புக்கு நாகரசத்தொடு கெந்தகம், இரும்புக்குவீர மெடுக்கவரிதாரம், இரும்புக்குத் தொட்டி யெளிதா நிமிளையே.

எளிதான செம்பிலிடு நல்ல லிங்கத்தை, எளிதான செம்பிலிடு நல்லவீரத்தை, எளிதான செம்பிலிடு நல்ல சூதத்தை-எளிதான செம்பிலிடு நீமுறுகலே. 939

முருகிய தங்கத்தில் மூட்டிடுவீரத்தை, முருகியதங்கத்தில் மூட்டிடு லிங்கத்தை, முருகிய தங்கத்தில் மூட்டிடு சூதத்தை, முருகிய தங்கத்தில் மூட்டிடு துத்தமே.

காந்தத்திலிங்க மனோசிலை கூட்டிடு, காந்தத்திலிங்கங் கலப்பாய் கெவுரியுங், காந்தத்தில் வீரமுங் காட்டாயரிதாரங், காந்தமு நாகரத்தொடு கெந்தியே. 941

ஆகியவேழுமடவாக யிப்படி, வாகிச்சமன் கூட்டவைத்ததற்குள்ளேதான், ஏகியெடுத்து யிதமாய்ச்செந்தூரிக்க, போகியவேதை பொன்மயமாகுமே. 942

மலையாய்ப்பழுத்திடு மாட்டுசெயசூதந், தலையான தங்கத்தைத் தாக்கிடு வங்கங்கேள், குலையாது வேதை கூட்டவறிவார்க்கு, உலையாமலுண்டு வுருவாய்ச் சமாதியே. 943

உருகுஞ் செயசூத மொன்றிடில் வேதையாம், தருகிய சூதத்தைத் தாக்கப் புறஞ்சோடு, மருகியுமன்று மயங்காதீர் மாண்பரே, பொருகிய சூதந்தான் பூந்திடில் வாறமே. 944

வேறு

மூலிகைக்குள்ளே முதற்றர மொன்பது, நீலிகொடிவேலி நிலையாமகாசோதி, பாலிக்கருநெல்லி பகுத்த கருநொச்சி, ஆலிக்கமுண்டணியதில்வாகபேதியே.

வெறியிருளே விளங்கு செந்நாட்பாலை - காதிகறுத்த கரிசலாங் கண்ணியுட், போதித்த கல்லிப்பு கட்

டிய த்ாமரை, சாதியினத் தொன்பதிற் சதகோடி வேதையே. 946

வேதை யெடுக்க விதஞ்சொன்ன ரென்னந்தி, தாதை நற்சூதத்தில் தனித்தனிகட்டுண்ணும், போதை சரக்கெல்லாம் பூட்ட மூன்சேர்த்திடும், பாதைக்கு நல்ல தாம்பாருஞ் சுகம்பாரே. 947

பாராய் நற்காயம் படுமுன்னே சித்தியாம், ஆராயுஞ் சித்தர்க்கு ஆகின்றமூலிகை, சேரக்கெவனமாஞ் செகமெல்லாங் கொண்டேகும் வாராயுலகர்க்கு வைத்தமுறைபாடே. 948

முறையாங் கொடிவேலி மூளையொக்குமே சாரம், மறையாத சோதியது காணிணங்கனேர், கறையாத கருநெல்லி கடுங்காரமே யொக்குந், தறையாங் கருநொச்சி தானுந்துரிசியே. 949

தானன மூண்டிதா னெக்குங்கல்லுப்பு, வானன வேதியும் வண்சீனமோ டொக்கும், பானன செந்தாடு பாவை சவர்க்காரங், தானன பிறங்கமுங் கர்ப்பூரமொக்குமே. 950

ஒக்கிய கல்லிலுாத்திடு தாமரை, பக்கிய சூடனும் பலமே சரியாகுந், தக்கியவொன்பதுஞ் சமமாஞ் சரக்குகள், இக்கியவேதை யிதற்குள்ளதிகமே. 951

அதிகமேதென்னிலறைந்தாரே யென்னந்தி, மதியுபமூலிமாட்டாதிது மூன்னே, பதியுறக் காட்டினர் பரிச முதல்வேதை, விதியுற நான்முகன் விளம்பவரிதாமே. 952

எறக்குஞ் சரக்கிலெடுப்பார் பரிசன, மிறக்குஞ் சரக்கிலெடுத்திடு சந்தான, மிறக்குஞ் சரக்கிலெடுத்திடு தாம்பர, மிறக்குஞ் சரக்கிலெடு காயசித்தியே. 953

சித்தியொன்றல்ல திசைக்குங் கவனமாஞ், சித்தியொன்றல்ல சேரப்பசும் பொன்னுஞ், சித்தியொன்றல்ல செகமெல்லாம் பூசிப்பார் சித்தியாஞ் சேரமாகுமொன்பதே. 954

## உதகம்

உதகம் பிறக்கு முயர்ந்த விலையிலே, யுதகம்பிறக்கு முழன்றிடு சுக்காணி, லுதகம் பிறக்கு முழன்றிடு சுக்காணி, லுதகம் பிறக்குமுபாசம் பூமியி, லுதகம் பிறந்த வுறுதியிடமிதே. 955

இடத்திலுதக மிருக்கின்ற வர்ணங்கேள், படத்த கறுப்பு பயின்றிடும் வெண்மை, கடத்துச் சிவப்பு கடும் பச்சை பொன்னிற, மடத்துவுதக மடவான வர்ணமே.

வர்ணம பிறந்தபின் வாசனையைகேளு, பர்ணம்பின றாற்றம்பகுந்தமல நாற்ற, முன்னசல நீர்முட்டைபோல வாசிக்கு, மன்னவழுகுறுமதிகமாங் கெந்தியே. 957

கெந்தியறிந்தபின்கேளிரு ரிசைபை, பந்தியினிக் கும் பலாப்பழமபோலுய, ருதிக்க சங்குங் கடுந்து புளியாகும், பொருந்தவுப்பாகப் போதவுழலுமே.

உழலுமகா லைகமொரு நாட்சணமொன்று, வழலு நல்வாரமவா வொருபட்சம், கழலுறு மாசந்தனித் தொருமண்டல, மழலுறுமாசம வருதக்நற்றேசியே.

தேசிகன ரோமஞ் சிந்திடும், கன்னிக்கு -. வாசுகி போலே வளைத்த ,தொருகட்டு-வாசியுறு நீரிலுள்ளே விளைவிடில-மாசியறுநாள மகத்துவஞ் சொல்லுமே.

கெந்தி. பெருங்காயங் கொடியுறு வள்ளிதான்-முந் தியமூத்தமூழுகுமந நாளையில்-மநதியுறுகின்ற வாசலை போயவிடும-நநதியுரைத்த நலம்துபாருமே, 961

சேந்துமால் தேவியைச் செலுத்தி யூறவிடிற்-போ ந்தசிவத்தார் புகழுவார்நன்மைதான-ஆயந்திடும வெற் றிலையனைவிர் பிசைநதிட, வாய்ந்தநிறம பொன்னுல மறுநிறம பொனனுமே. 992

பொல்லாதும்நல்லதும் போட்டேயறிந்தபின், கல் லாத மாண்பார்க்குக் காட்டாதே யித்துறை, வல்லான சூதம்வழங்கிய பாஷாணம்-எல்லாத் தத்தகாயிடு முன் னிலையாமே. 963

இனிமை நாற்றமிணங்கு மகாநாகந்-தனிமையாய்
நாகஞ் சமன்விட்டு நீரிலே-வனிதனாகவே மண்டலந்
தின்றபின்-புனிதனானையே போகாதுகாயமே 964

மண்ணு மினிமைமரு திறமானபின்-பின்னு மந்
தப்படிபிரட்டதிரிமூன்றி-தின்னும் படியே செலுமற்ற
வல்லார்க்குப் - பண்ணும் பிரமன்பதின்கோடி வாழ்
வாரே 965

தாதுயினிமை தயங்காலவணைமும் - பேதவுபரசம்
பிரியாநல்மூலியுந்-தீதறக் கட்டிச் செய்ததேவெகு சித்
தர்-நாதனடைத்நை நாட்டிடும் பாருமே. 966

உண்ணு நற்சூட்சத்தி லுழன்றே சுவையாறும்
பண்ணியதனைப் பரிசுத்தமாய்த் தள்ளி - மண்ணும்
பொடி காணிம்மண்டலங்கொண்டிடில்-தண்ணுந்தனு
வுஞ்சதகோடி வாழ்வாரே 967

அயச்செம்பு.

கூட்டுஞ் செம்புகுலாவுமயச்செம்பு, நீட்டுங்காரமு
நேர்ந்ததுரிசுடன்-பூட்டுங் கெந்தம் புகலும் நவாச்
சாரம், தீட்டுமேசமனாக நிறுத்திடே. 968

நிறுத்துராவடம்தேருப்பலமூன்று, வறுத்துமே சா
க்காருநிம்பச்சாறு, திருத்தமாகவே தேர்ந்தபழச் சாற்
றில், பொருத்தமாகவே புகழவரைத்திடே. 969

அரைத்துச் சாமமனுபதுமானபின், நிரைத்து
மேசலநோய பம்பியே, திரைத்த மூசைக்குள்சேரப்
போதிந்துமே, பரைத்த சீலையேழ் டாங்காகச்
செய்திடே. 970

செய்துமே யுலைசிறக்கவேயூதிடு, நைதுசெம்பினை
நவிலவே! வங்கமிட், பெய்துவோட்டினிற் சிறக்கவே
யூதிடு, பெய்துசெம்பினைப் பாங்காயெடுத்திடே. 971

எடுத்துச் செம்பொனெழிலாய்ச் சமனடை,
தொடுத்து மேரவி துவளவரையிடை, கொடுத்து
வொன்றுய்க்கு மூறவுருக்கிட, அடுத்த செம்புவைந்
தாருமாற்றுமே. 972

தங்கச்செம்பு.

ஆகுஞ்சூதமறையுமொருபலம், ஏகுங்காந்தமெழு லாயிருபலம் பாருமனோசிலை பகுந்திடுமுப்பலம், வொரு கெந்தகம்வைகைசமன் தூக்கிடே. 978

தூக்கிக் காட்டாமணக்கின் பாலாலரை, தூக்கிக் காரந்தனியப் பொதிந்துமே, போக்கில்லாமற் பொரு ந்தமூசைக்குள்வை, வாக்குதப்பாமல் வளமாகவூதிடே.

ஊதிடச்செம்புயர்ந்ததங்கச்செம்பு வாதிகாளிதை வகையா யறிந்திடீர்-சோதிமூலந் துலங்குமிச் செம்பு தான், ஆதிநந்தியருளியவாக்கிதே. 975

வாக்குதப்பாவடமொழிதானறிந், தார்க்குமிம் முறைதப்பாது திண்ணந்தான், போக்கில்லாமற்பொரு ந்தவேசெய்திடில்-பாக்கியம் பெற்றுப் பாரிலிருப்பரே.

கெந்தகச்செம்பு.

பாரில்வேதை பகருமகாவேதை, யாருமெய்க்கவ ருளிளுரென்னந்தி, சேருகெந்தகஞ்சிறக்கவொருபலம் தாரிலாததனிக்கோவைச் சாறிடே. 977

இட்டுமே யறைமொழிலாயதுசாமங்-கட்டுமே கெந் தகங்கமறமுடியாது, வட்டிமே சீலைவாகாகச்செய்திடு திட்டமாகவே சேரவுருக்கிடே. 978

உருக்கச் செம்பு வுயர்ந்தவருணையும் - பெருக்க வேதைபுகலமுடியாது-செருக்கவே ரவிசேர்த்தே யுருக் கிடில்-பருக்கமாற்றுப்பகர முடியாதே 979

நாகவேதை

சொல்லு நாகந் தூடியாமொருபலம், வெல்லுங் கெந்தகம் விருப்பு மிருபலம், கொல்லுஞ் சூதங்குலா வுஞ் சரிபலம், புல்லு மூன்றும் புகலவரைத்திடே. 980

அரைத்துக்கையானமூலிச்சாற், திரைத்துமே வில்லை திறமாகச் செய்திடு, நிரைத்துச் சீலைநிலைமா மெழுசீலை, கரைத்துமேகரையதுவேவைத்திடே. 981

வைத்துமேபுடம் வாசாய் கெஜபுடம், பைத்து
மருணன் பகருஞ் செந்தூரமாம், நைத்து குன்றிடை
ராட்டிடுசெய்பிற்கு, பத்துமாற்றுப் பகர்ந்தது நந்தியே.

நந்தி யுரைத்தது நன்னூலிதுவாகும், புந்திமா
யன் புகலவுரைத்ததாம், எந்தநூலு மிந்நூலுபோலொ
வ்வாது, முந்திநூலு முதநூலிதுவாமே.

பித்தளை வேதை.

ஆகுமேகுட்வனன் பாயொருபலம், பாகுமிந்துப்பு
பகருங்வெடியுப்பு, எகுமிஞ்சிச்சாறெழிலாயரைத்துமே
வேகுமே குடவன் மேலிதைப்பூசிடே. 984

பூசுந்தீட்சை புகலுந் தசமார்க்கம், வீசுமேபுடமே
வுங் கெசபுடம், ஆகுமே களிப்பகல வெந்திடிற் செம்
பொன், காசுபோல் மேனிகழறிய வேதையே. 985

வேதை மார்க்கம் வரைந்தார் வெகுகோடி, பாதை
யாபிது பகரு நற்பாதையாம், பேதையாம் வெள்ளி
பேசும் ரசவெள்ளி, நீதில்லாமற் றெளியவேபூட்டிடே.

பூட்டு மார்க்கம் புகலும் பத்துக்கொன்று, சூட்டி
பொனொன்றாய்க் குலாவியுருக்கிடில், நீட்டுப்வேதை நெடிய
பொருப்வேதை, நீட்டுமூலர் தெளியவுரைத்ததே. 987

உரைத்தார் ஆயுறுவேதமிதுவாகும், நிரைத்தார்
காவியம் நேருமோராயிரம், பரைத்தார் கோடிபகரும்
டலெவிதம், திரைத்துநந்தி தெளியவறைந்ததே. 988

மிருதார்சிங்கு வேதை

அறையுஞ்சிங்கி யரிய வொருபலம், நிறையுங்
காந்தம் நெடுமவிரு பலம், இறையுங்காரந் தெளிய சரி
பலம், முறையும் ராஜகனியாலரைத்திடே. 989

அரைத்துச் சாமமரையுமறுசாமம், நிரைத்துமே
வில்லை நேராய் ரவியிடு, கரைத்துக்காடை கருது மிரு
புடம், வரைத்துப் பாகம் வகையாகப்போட்டிடே. 990

போட்டு செந்தூரம் புகலும் பெருவேதை, நீட்டு
செம்பினில் நேராய் பத்துக்கொன்று, பூட்டுருக்கப்
புகலு நற்செம்பாகும், காட்டும் நந்திகழறியவேதமே.

வேதமாயிது விளம்புமாயுர் வேதம் போதஞானம்
புகலுமிவ்வேதமாம், நீதமான நெடிய பெருவேதை,
தீதமாகத் தெளியவே கண்டிடே. 992

பால்துத்த வேதை

கண்டு துத்தங்கடிய விருபலம், ரெண்டுகாந்தம்
நெகிழவே நாற்பலம், பண்டுமே பழச்சாற்றாலரைத்திடு
விண்டு சாமம் விளம்பவே மாட்டிடே. 993

மாட்டிக் கல்வமகிழவரைத்திடு, பூட்டிக்குக்குடம்
பொருந்தவே போட்டிடு, நீட்டு செந்தூரம் நெடிய
வருணனும், கூட்டும் வெள்ளியிற் குறிப்பாய்க்கொடுத்
திடே. 994

கொடுக்கவேதை குலாவு நல்வேதையாம், இடுக்க
மின்றியிணங்கும் பெருவேதை, தடுக்கவாதி தரணியி
லுண்டோதான், ஒடுக்கமான வுயர்ந்தோர்வேதையே.

நூற்பெருமை

வேதைமார்க்கம் வறைந்தார் வெகுகோடி, பாதை
யானபகருங்களங்கமும், நீதமான நெடிய செந்தூர
மும், தீதில்லாமற் றெளியபற்பங் கண்டே. 996

கண்டார் பற்பங் கழறும் பலவிதம், விண்டார்
வேதை விளப்பும் பரிசனம், அண்டாமார்க்கமறையும்
பலகோடி, வண்டாமாதே வகுத்தார் மித்திரமே. 997

மித்திரங்கள் மிகுந்த சத்துக்களும், சித்திஞானி
தெளியவுடற்கூறும், பத்தியாகப் பகரும் பரமார்க்கம்,
முத்திகொள்ளு முயர்ந்ததோர் தீட்சையே. 998

தீட்சைமார்க்கந் தெளிந்தார் பலகோடி, காட்சி
யுண்டு கழறுமிவ்வேதத்தில், நீட்சியான நிலையா மகா
வித்தை, ஆட்சியாக வறைந்தார் முனிவரே. 999

அறைந்தார் ஆயுறுவேத மிவ்வாயிரம், கறைந்தா
ருண்மை கழறினர் வெகுகோடி வறைந்தார் வாதக்
காலை வகுத்தனர், நிறைந்தாராயிரந் தெளிவுற முற்
றிதே. 1000

திருமூலநாயனார் வைத்திய காவியம்-1000

முற்றிற்று.